# கல்கி

KALKI 11.12.2005
ரூ .7.00
96 பக்கங்கள்

குடும்பத்துடன் களிக்க...

உலக அழகியா...
உள்ளூர் அழகியா..?



"ஆட்சியில் பங்கு
கேட்க மாட்டோம்!"

# வட்டமேஜை

**ர**ம்யா நாகேஸ்வரனின் சிறுகதை இயல்பாய் இருந்தது. ஆனால், முடிவுதான் சரியில்லை. பெண்கள் இன்னுமா குட்டக் குட்ட குனிய வேண்டும்? கதைகளிலாவது நிமிர்த்தக் கூடாதா? குமாரை மட்டும் துபாய்க்கு அனுப்பிவிட்டு, குழந்தை அனுவுக்காக உமா அங்கேயே தங்கி விட்டிருந்தால் கதை அட்சர லட்சம் பெற்றிருக்கும். பாரதி கண்ணம்மாக்களை கதைகளிலாவது மீட்டெடுங்கள்.

**- என். பாலு**



## உண்மையின் பிரதிபலிப்பு!

'**இ**வர் ரப்பர் ஸ்டாம்ப் அல்ல' கட்டுரை கே.ஆர்.நாராயணனின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டியது.

**சென்னை-116, கே.துரைராஜ்**

**ஜ**னாதிபதி அப்துல்கலாம் அவர்கள், மனம் நெகிழ்ந்து எம்.எஸ். பற்றி கூறியதைப் படித்ததும் உயிர்சிலிர்த்தேன்!

**அனுப்பானடி, இரா.கல்யாணசுந்தரம்**

**ச**த்யசாயி அட்டைப்படம் கண்களில் ஒற்றிக்கொள்ளலாம் போல் அற்புதம்!

**சென்னை-42, ரா.கிருஷ்ணமூர்த்தி**

**அ**ட்டப்பட்டுவைப் போட்டுத் தாக்கியதைப் படித்து வயிறு புண்ணானதுதான் மிச்சம்.

**இராஜபாளையம், வே.ஈஸ்வரன்**

**ஜெ**யமோகன் பேட்டி நன்று. அவரது செயல், வேகம், தொழில் அக்கறை அவரை உயர்த்தும்.

**லால்குடி, எம்.இராஜேந்திரன்**

## ஏங்கவைத்த என்.எம்!

'**எ**ப்படியும் வாழலாம்' என்று நினைக்கும் இக்கால இளைஞர்களுக்கு 'இப்படித்தான் வாழ வேண்டும்' என்று வாழ்ந்து காட்டும் நா.மகாலிங்கம் அவர்களின் வாழ்க்கை ஒரு பாடம்!

**கந்திகுப்பம், க.மோ.சிவா**

'**வை**ராக்யத்தின் வைரவிழா' படித்ததும் இப்பேர்பட்ட ஒரு மனிதருடன் பழக நமக்குக் கொடுப்பினை இல்லையே என்று ஏங்க ஆரம்பித்து விட்டேன்!

**நாகப்பட்டினம், நாகை சந்திரா**

**ஐ**யா நா.மகாலிங்கம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை, பள்ளிகளில் துணைப் பாடமாக அரசு வைத்திட வேண்டும்!

**ஈரோடு, கே.எஸ்.சிவசேனாபதி**

**அ**ருட்செல்வரின் வாழ்வை அறுபத்து நான்கு பக்கங்களில் சுருங்கச் சொல்லி எளியவரும் உணரும் விதமாய் வழங்கியது அற்புதம். கல்கிக்கும்



கல்லு வீட்டு ஃபெர்னாண்டஸ் பற்றின சக்சஸ் ஸ்டோரி, தன்னம்பிக்கை டானிக்!
வள்ளியூர், எல்.சங்கரமூர்த்தி

'பூலோக நரகம் பீஹார்...' தலையங்கம் உண்மையின் பிரதிபலிப்பு. தேர்தலுக்குப் பிறகேனும் மாற்றம் ஏற்படட்டும்!
தஞ்சை, எம்.சிவகுருநாதன்

அஜீத்துக்கு நிச்சயம் எதிர்காலம் உண்டு. அவர் மீண்டும் ஒரு ரவுண்டு வருவார்.
திருப்பரங்குன்றம், டி.கே.சுப்ரமணியன்




'டோனி' பற்றி சிலாகித்து எழுதி பரவசப்படுத்தி விட்டீர்கள். 'நச்' கட்டுரை!
மேலகிருஷ்ணன் புதூர், பிரபாலிங்கேஷ்

யோசித்துப் பேச வேண்டும் - ராதிகா அட்வைஸ் டாப்போ டாப்!
சென்னை-20, ஜி.சிதா

ஐயாவுக்கும் நன்றி.
பெங்களூர், ப.மூர்த்தி

அருட்செல்வர் அவர்கள் மனைவி திருமதி மாரியம்மா அவர்களின் அறுபதாவது திருமண நாள் சிறப்பு வெளியீடு படித்து மகிழ்ச்சி அடைந்தேன். 1953 முதல் இத்தம்பதியின் நட்பு கிடைக்கும் பேறு பெற்றேன். என் கணவர், மறைந்த மருத்துவர் சிதம்பரம் அவர்களுக்கு, அய்யா உடன்பிறவா சகோதரர்போல். எனக்கும் அம்மாவுக்கும் உள்ள நட்பும் அவ்வாறே. இவர்களைப் பற்றி நான் எழுதுவது என்றால், சர்க்கரை பொம்மை, கடல் ஆழம் காணச் சென்ற கதையாகிவிடும்! நல்ல தம்பதி. தர்ம சீலர்கள்.
சென்னை, சரஸ்வதி சிதம்பரம்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

# "ஆட்சியில் பங்கு

**தமது அமைச்சக செயல்பாடுகளைப் பற்றியே அதிகமாகப் பேச விரும்பும் மத்திய சுகாதாரத்துறை அமைச்சர் அன்புமணி, அரசியலைப் பற்றிப் பேசுவது மிகவும் குறைவு. அப்படிப்பட்டவரை ஒரு மழைக்கால மாலையில் சந்தித்தோம்:**



**பாராளுமன்றத் தேர்தலுக்கு முன்பு போட்ட சில உத்தரவுகளை ரத்து செய்த தன் காரணமாகவும், மக்களின் பல்வேறு பிரிவினருக்குப் புதிய சலுகைகள் வழங்கப் பட்டு வருவதாலும், ஜெயலலிதாவுக்கு ஆதரவு பெருகி வருவதாகப் பரவலாகச் சொல்கிறார்களே!**

"சில பத்திரிகைகளும் போலீஸ் உளவுத் துறையினரும் இதுபோன்ற கருத்துக்களை மக்களிடம் பரப்ப முயன்று வருகிறார்கள். இது உண்மைக்கு மாறானது. ஜெயலலிதாவின் இப்போதைய ஆட்சியிலும் சரி; 1991-96-ம் ஆண்டு ஆட்சியிலும் சரி, பாதிக்கப்படாத பிரிவினரே கிடையாது. இன்னமும் நான்கு மாதத்தில் தேர்தல் வருகிறது என்பதால் சைக்கிள், வேட்டி, சேலை என்று அள்ளி விடுகிறார். தமிழ்நாட்டு மக்கள் ஒன்றும் முட்டாள்கள் அல்ல. இவர் அறிவிக்கும் பல திட்டங்களுக்கு நிதியும் கிடையாது. இவரை மீண்டும் ஆட்சியில் அமர்த்தினால் வேதாளம் முருங்கை மரம் ஏறிய கதைதான் என்பது எல்லோருக்கும் தெரியும். அரசு ஊழியர்களுக்கு ஜெ. எத்தனை சலுகைகள் அளித்தாலும், கடந்த காலங்களில் அவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை அவ்வளவு சீக்கிரம் மறந்து விட முடியுமா? பத்தாயிரம் சாலைப் பணியாளர்களை வீட்டுக்கு அனுப்பிய கொடுமையும், நீதிமன்றம் சொன்ன பிறகும் அவர்களுக்கு வேலை கொடுக்காமல் இழுத்தடிப்பதும் எந்த விதத்தில் நியாயம்? மக்கள், தேர்தலில் அவருக்குத் தக்க பாடம் கற்பிப்பார்கள்."



**ஆதரவு பெருகி வரவில்லை என்று சொல்கிறீர்கள். ஆனால், அ.தி.மு.க. இடைத்தேர்தல்களில் ஜெயித்துக் காட்டியிருக்கிறதே! அதன் முன் உங்கள் கூட்டணி பலம் எடுபடுமா?**

"நடக்கப்போவது என்ன இடைத்தேர்தலா? இடைத்தேர்தல் என்றால் பஞ்சாயத்துக்கு நான்கு அமைச்சர்கள் ஒரு மாதம் முன்பே டேரா போட்டு சகல வசதிகளையும் 'கவனித்துக்' கொள்வார்கள். இடைத்தேர்தலில் எதிர்கட்சிகள் வென்றாலும் ஆட்சி மாறாது என்பது மக்களுக்குத் தெரியும். ஆனால், 234 தொகுதிகளிலும் கட்சியினர், செல்வாக்கையும் அதிகாரத்தையும் கட்டவிழ்த்துவிட முடியாது. ஏனென்றால், மக்கள் ஜெயலலிதாவை வீட்டுக்கு அனுப்புவதில் தெளிவாக இருக்கிறார்கள்."

**ஆதரவும் பெருகவில்லை; செல்வாக்கும் எடுபடாது என்கிறீர்கள். ஆனால் உங்கள் கூட்டணியைப் பிளப்பது அல்லது பலவீனப்படுத்துவதன் மூலம் ஜெ. தன்னை பலப்படுத்திக்கொள்ளும் வாய்ப்பு இருக்கிறதே?**

"ஜனநாயக முற்போக்குக் கூட்டணி எப்படி தில்லியில் ஒற்றுமையாகச் செயல்படுகிறதோ, அதுபோன்றே தமிழகத்தில் கலைஞர் தலைமையில் கட்டுக்கோப்பாகச் செயல்பட்டு வருகிறது. இந்தக் கூட்டணியை எந்தச் சக்தியாலும், பலவீனப்படுத்தவோ, பிளக்கவோ முடியாது. சீட்டு விவகாரத்தில் பிரச்னை வரும் என்று சில ஓநாய்கள் காத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால், மூத்த தலைவரான கலைஞர், எந்தவிதப் பிரச்னையுமின்றி கூட்டணியை வழிநடத்திச் செல்வார்."

**கூட்டணியைப் பிளப்பது என்று பேச்சு வரும்போது சந்தேகக் கண்கள் பா.ம.கவை நோக்கித்தானே பாய்கின்றன!**

"தி.மு.க. தனித்தே ஆட்சி அமைக்கும். கலைஞர்தான் முதல்வர். அப்படி தனித்து ஆட்சி அமைக்க முடியாத நிலையில் கூட்டணி அரசு அமைந்தால், பா.ம.க அதில் பங்கு பெறாது."

**அமைச்சரவையில் இடம் பெற்றால், மாநிலத்திலும் மக்களுக்குச் சேவை செய்ய வாய்ப்புக் கிடைக்குமே!**

"அமைச்சர் பதவி இல்லாமலேயே மக்களுக்காகப் பணியாற்ற முடியும்."

# கேட்க மாட்டோம்!"

(படபடக்கிறார்) "தமிழகத்தில்தான் தொலைக்காட்சிகளும் பத்திரிகைகளும் கட்சி சார்பாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. நடுநிலை மீடியா ரொம்பக் குறைவு. எங்கள் நிலைப்பாட்டைப் பற்றி வதந்திகளைக் கிளப்பி விடுபவை பத்திரிகைகள்தான். தி.மு.க., அ.தி.மு.க., காங்கிரஸ், ம.தி.மு.க, ஏன் கம்யூனிஸ்டுகள் கூட தேர்தலுக்குத் தேர்தல் அணிகளை மாற்றிக் கொள்ளவில்லையா?- அல்லது புதிய அணிகளை அமைத்துக் கொள்வதில்லையா? மற்ற கட்சிகள் செய்தால் ஏதோ கொள்கை மாற்றம் என்பது போலவும், பா.ம.க சில நிலைப்பாடுகளை எடுக்கும்போது, சந்தர்ப்பவாதம் என்பதாகவும் கூறுவது எந்த விதத்தில் சரி. நாங்கள் வளர்ந்து கொண்டிருப்பது ஒரு 'சிலருக்கு' பிடிக்கவில்லை. எனவே எப்படிச் செய்திகளைப் போட்டால் பா.ம.கவுக்குச் சரிவை உண்டாக்கலாம் என்று திட்டமிட்டு சதி செய்கிறார்கள். இது எடுபடாது."

**உங்கள் கூட்டணி பலமாக இருப்பதாகச் சொல்கிறீர்கள். தேர்தலில் வெற்றி உறுதி என்று நம்பிக்கையோடு இருக்கிறீர்கள். தி.மு.க. தனித்து மெஜாரிட்டி பெறாது போனால், கூட்டணி அரசில் பா.ம.க பங்கு பெறுமா?**

**இப்போது இப்படிச் சொல்லும் நீங்கள், மத்தியில் அமைச்சராகப் பொறுப் பேற்றது ஏன்? இன்னமும் சொல்லப் போனால் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸ் 'என் குடும்பத்தினர் யாரும் சட்டமன்றமோ, பாராளுமன்றமோ செல்ல மாட்டார்கள்' என்றுகூடச் சொல்லியிருந் தாரே?**

"அரசியலில் சில சமயம் ரொம்ப வினோதமான விஷயங்கள் நடந்துட்டுத் தான் இருக்கு. அடிப்படை கொள்கைகளில் வித்தியாசப்பட்டு இருக்கும் தி.மு.கவும் பா.ஜ.கவும் கூட்டணி அமைத்து வெற்றி பெற்று கூட்டணி ஆட்சி அமைத்தது. இது போன்ற ஒரு வினோதமான நிகழ்வுதான். அதுபோல பா.ம.க.வில் சில மாற்று ஏற்பாடுகளை நாங்கள் செய்ய வேண்டிய தாகப் போய்விட்டது. டாக்டர் ஐயா தீரனை மிக நம்பிக்கையுடன் வளர்த்து விட்டார். அவர் முதுகில் குத்திவிட்டு ஓடி விட்டார். அதேபோல் மிக எதிர்பார்ப் புடன் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த

தலித் எழில்மலையை, கட்சியில் எதிர்ப்பிருந்தாலும் மத்தியில் அமைச்சராக்கினார். ஆனால், அவர் துரோகம் செய்து வெளியேறி விட்டார். இந்த நிலையில் கட்சியின் எதிர்கால நன்மையை உத்தேசித்து, நிர்வாகிகள் ஒட்டு மொத்தமாக எனக்கு வாய்ப்புத் தரும்படி ஐயாவைக் கேட்டுக் கொண்டார்கள். அந்த அடிப்படையில்தான் ராஜ்ய சபா உறுப்பினர் வாய்ப்பும் அதைத் தொடர்ந்து அமைச்சர் வாய்ப்பும் கிடைத்தன."

**குஷ்பு விவகாரத்தில் பா.ம.கவினர் செய்தது சரிதானா? அவருக்குக் கருத்துச் சுதந்திரம் இல்லையா?**

"முதலில் ஒரு விஷயம். குஷ்பு சொன்ன கருத்தும் அதைத் தொடர்ந்து நடந்த மீடியா ரகளையும் என்னைப் பொறுத்த வரையில் ஒரு non issue. அதை ஊதிப் பெரிதாக்கி விட்டவர்கள் பத்திரிகைகளும் தொலைக்காட்சிகளும் தான். குஷ்புவின் கருத்து மிகவும் இயல்பாகவே பலமான எதிர்ப்பைத் தமிழக மக்களிடம் சம்பாதித்தது என்பதுதான் என் கருத்து. அந்த எதிர்ப்புதான் ஒரு உணர்ச்சிக் கொந்தளிப்பாக தெருக்களில் எதிரொலித்தது. இதில் பா.ம.கவினரும் கலந்து கொண்டிருக்கலாம். ஆனால், கட்சி ரீதியாக பா.ம.க நிர்வாகிகளுக்கோ, தொண்டர்களுக்கோ எந்தவிதமான வழிகாட்டுதலையும் குஷ்பு விவகாரத்தில் சொல்லவில்லை."

**சுனாமி நிவாரணத்துக்கு வந்த நிதியில் பெரிய ஊழல் நடந்து விட்டதாகவும் அதில் உங்கள் பங்கு இருப்பதாகவும் பரபரப்பாகச் செய்திகள் அடிபட்டதே!**

"சில வெளிநாட்டுத் தொண்டு நிறுவனங்கள் ஐம்பது கோடி அளவுக்கு நிதி தருவதாகச் சொன்னார்கள். ஆனால் வந்ததென்னவோ ஒரு கோடிதான். அதுவும் கேரளாவுக்குக் கொடுக்கப்பட்டு விட்டது. இதில் எங்கே ஊழல், அமுக்கல் வந்தது? அவதூறு பரப்புவதைத் தக்கபடி எதிர்த்து நின்று முறியடிப்பேன். இங்கே தமிழ்நாட்டில் சுனாமி நிவாரணத்தில் நடைபெறும் ஊழல்களைப் பற்றி எழுத இவர்களுக்குத் தெம்பில்லை."

**இந்த நான்கரை வருட காலத்தில் 'ஜெ' ஆட்சியில் எந்தச் சாதனையும் இல்லை என்பதுதான் உங்களின் ஒட்டுமொத்த கருத்தா?**

(யோசிக்கிறார்) "அரசு ரீதியாகச் சில காரியங்கள் நடந்துகிட்டுத்தான் இருக்கு. 'அதைச் சொன்னால் ஜெ.க்கு அன்புமணி பாராட்டு' என்று எட்டுக் காலம் போட்டு எதை எதையோ எழுதி விடுவார்கள். சுகாதாரத் துறையில் தமிழ்நாட்டிலும் கேரளாவிலும் பல பணிகள் கடந்த பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாக நல்ல முறையில் நடந்து வருகின்றன. அவை அரசு நிறைவேற்றும் மக்கள் நலப்பணிகள். இட்ட அடிப்படையில் சரியான பாதையில் சென்று கொண்டிருக்கின்றன. மற்றபடி தமிழ்நாட்டில் பாராட்டுவதற்கு ஒன்றும் சாதனை இல்லை, வேதனைதான். தேநீர்க் கடைகளைப் பத்து மணிக்கு மூடச் சொல்லிவிட்டு ஒயின் ஷாப்புகளை பன்னிரண்டு மணி வரை திறந்து வைத்து 5000 கோடி ரூபாய் வருமானம் என்கிறார்கள். லட்சக்கணக்கான குடும்பங்கள் மதுவின் கொடுமையால் சிதைந்து போகின்றன. இந்த டாஸ்மாக் சாதனைதான் ஜெ.வின் பெரிய சாதனை!"

**- ப்ரியன்**

**"டாஸ்மாக்தான் ஜெயலலிதாவின் மிகப்பெரிய சாதனை!"**



# புரட்டிப்போட்ட மழை... தவித்துப்போன மக்கள்!

ஒரு காலத்தில் வானத்தை அண்ணாந்து பார்த்து 'மழை வருமா' என்று ஏங்கிய முகங்கள்தான்... இன்றைக்கு மேகம் லேசாகக் கறுத்தாலே இருண்டு போய் விடுகின்றன. அந்த அளவுக்கு சமீபத்திய புயல்மழை மக்களைப் புரட்டிப் போட்டுவிட்டது.

வறட்சி மாவட்டங்கள் என்று கூறப்பட்டு வந்த இராமநாதபுரம், புதுக்கோட்டை, பெரம்பலூர் மாவட்டங்களில்கூட கொட்டித் தீர்த்த அடைமழை காரணமாக, அதன் காட்டாறுகளில் கரைபுரண்டு ஓடியது வெள்ளம். திருவாடனை அருகே அரசுப் பேருந்து ஒன்று காட்டாற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது. அதில் பயணம் செய்த நூற்றி ஐந்து நபர்களில் டிரைவர் உட்பட பதினாறு நபர்கள் மட்டுமே உயிர் பிழைத்துள்ளனர். மீதமுள்ள நபர்களின் சடலங்கள் ஒவ்வொன்றாகக் கிடைத்து வருகின்றன. இதேபோல் பட்டுக்கோட்டை அருகே பேருந்து ஒன்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு, சுமார் ஐம்பத்தைந்து பயணிகள் தண்ணீரிலேயே ஜல சமாதியாகிவிட்டனர். பல மாவட்டங்களில் நூற்றுக்கணக்கான கிராமங்கள் வெள்ள நீரால் சூழப்பட்டன. விளைநிலங்களில் சாகுபடி செய்யப்பட்டிருந்த பயிர்கள் தண்ணீரில் மூழ்கிப் போயின.

அமராவதி அணைத் தண்ணீர் அதிக அளவுக்கு முக்கொம்பில் வந்து சேர்வதாகத் தகவல் வந்த உடனேயே, ஸ்ரீரங்கவாசிகள் பலருக்கும் வயிற்றில் புளியைக் கரைத்துவிட்டது. 1977-ல் நிகழ்ந்த வெள்ளத்தின்போது ஸ்ரீரங்கம் பாதிக்கப்பட்டதற்கு, அமராவதி அணைத் தண்ணீரும் ஒரு காரணம். இருபத்தியெட்டு ஆண்டுகளுக்குப் பின்னர் எங்கே தற்போதும் அவ்விதம் ஏதும் நடந்து விடுமோ என அனைவருக்கும் பயம். வழக்கம்போல முக்கொம்பு அணைக்கு அளவுக்கு அதிகமாக வந்துகொண்டிருந்த அமராவதி அணைத் தண்ணீர், காவிரியிலும், கொள்ளிடத்திலும் பிரித்து விடப்பட்டு நிலைமை சரி செய்யப்பட்டது.

புதுக்கோட்டை, மணப்பாறை பகுதிகளில் வந்த காட்டாற்று வெள்ளமும் குடமுருட்டி ஆறு வழி

• திருவாடனை விபத்து மீட்புப்பணி...



யாகக் காவிரியில் வந்து கலந்தது. அமராவதி, நொய்யல், திருமணிமுத்தாறு, பவானி, அய்யாறு போன்றவற்றின் உபரி நீரும் முக்கொம்பு நோக்கி வந்து, இந்தத் தண்ணீர் காவிரி - கொள்ளிடத்தில் பிரித்து விடப்பட்டதில் காவிரி, கரை தளும்பிச் சென்றது. சில தினங்களாகத் தொடர்ந்து மழை வேறு பெய்துகொண்டிருந்ததால் நேரமாக ஆக காவிரியில் தண்ணீரளவு உயர்ந்து கொண்டே போனது. இதனால் ஸ்ரீரங்கம், திருவானைக்காவல் பகுதி மக்களிடையே திகில் தொற்றிக்கொண்டது. ஆற்றை விட உயரமான அம்மா மண்டபத்தின் நுழைவுப்படிகள் வழியே தண்ணீர் தாண்டி வந்தது. முதல் நாளிரவே முன்னெச்சரிக்கையாக மணல் மூட்டைகளை அடுக்கி வைத்திருந்தது மாநகராட்சி நிர்வாகம். அதனையும் கடந்து கசிந்து வந்த தண்ணீர், எங்கே ஸ்ரீரங்கம் மூழ்கி விடுமோ என்று கவலைகொள்ள வைத்து விட்டது.



• காவிரியின் தென்கரை உடைந்த இடம்...

வெள்ளிக்கிழமை (நவம்பர் 25) காலை எட்டரை மணியளவில், திருச்சியிலிருந்து எட்டு கி.மீ தூரத்தில் புத்தாபுரம் கிராமம் அருகே காவிரியின் தென் கரையானது உடைப்பெடுத்துக் கொண்டது.

துப்பாக்கித் தொழிற்சாலைக்கான பம்ப் ஹவுஸ் அருகே ஏற்பட்டிருந்தது அந்த உடைப்பு. நல்லவேளை, அதன் முகப்பிலிருந்து கண்ணுக்கெட்டிய தூரம்வரை வயல்கள். குடியிருப்புப் பகுதிகள் ஏதுமில்லை. உடைப்பு ஏற்பட்ட இடத்திலிருந்து ஐம்பது ஏக்கர் தூரம் நெல் வயல்களில் முழுவதுமாக மணல் மேடு தட்டிப் போயுள்ளது. காவிரியின் இந்தத் தென் கரையானது, திருச்சி, சத்திரம் பேருந்து நிலையத்திலிருந்து கல்லணை செல்கின்ற பேருந்து வழித்தடமாகும். இப்பொழுது பஸ் போக்குவரத்து இந்த வழியாகத் துண்டிக்கப்பட்டுள்ளது.

வேங்கூரில் தலித்துகள் வசித்து வரும் கலைஞர் காலனியில் முந்நூறு வீடுகள் வெள்ள நீரால் சூழப்பட்டுள்ளன. அவர்கள் அனைவரும் தனியார் பள்ளி ஒன்றில் தங்க வைக்கப்பட்டிருக்கின்றனர்.

• பாதிக்கப்பட்ட கலைஞர் காலனி மக்கள்...



புத்தூர் கலிங்கு ஆறு கண் மதகில் தேக்கி வைக்க முடியாத பெரு வெள்ளம், திருச்சி மாநகரின் கரு மண்டபம், பொன்நகர், செல்வநகர், தீரன் நகரை மூழ்கடித்துள்ளது. அதன் வழியாக உடைப்பெடுத்துப் பொங்கி வந்த தண்ணீர் சீனிவாச நகர், வயலூர் ரோடு, பிஷப் ஹீபர்



* புத்தூர் கலிங்கு ஆறு கண் மதகிலிருந்து வெளியேறும் தண்ணீர்...



* வெள்ளத்தால் அரித்த குடமுருட்டி ஆற்றின் கரைகள்...

கல்லூரி, இராமலிங்க நகரைச் சூழ்ந்துகொண்டது. காட்டாறுகள் வழியாக ஓடிவந்த தண்ணீர், புத்தூர் கலிங்கு வழியாகப் பெரு வெள்ளமாகப் பொங்கி வழிந்தது. இதனால் குட முருட்டி ஆற்றின் இரு கரைகளும் பெருமளவு அரித்து கரைந்து போயுள் ளன. அதன் விளிம்புகளில் நூற்றுக் கணக்கான குடிசைகள் அமைந்துள் ளதுதான் பெரும்சோகம்.

புத்தூர் கலிங்கு வழியாக மட்டும் வினாடிக்கு சுமார் ஐம்பதாயிரம் கன அடித் தண்ணீர் காவிரியில் வந்து சேர்ந் துள்ளது. இந்தளவு தண்ணீர் இதற்கு முன் வந்ததில்லை. குடமுருட்டி ஆற்றி லிருந்து காவிரியில் கலந்த இந்தப் பெரு வெள்ளமே அம்மா மண்டபத்தைத் தாண்டி தண்ணீர் அதன் சாலையில் வழிந்தோடக் காரணமாய் அமைந்தது. புத்தூர் கலிங்குப் பகுதியை இருபது மத குகள் கொண்ட சிற்றணையாக மாற்றி யமைக்க வேண்டுமெனக் கோரி வருகின் றனர் இப்பகுதி விவசாயிகள். இதனால், காட்டாறுகள் வழியாக வந்து சேரும் வெள்ள நீரை தேங்கி வழிந்தோடாமல் முறைப்படுத்தி காவிரியில் வடித்துவிட லாம் எனச் சொல்லப்படுகிறது.

“வெள்ளத்தினால் பல இடங் களில் முக்கிய சாலைகள், தரைப் பாலங்கள் பழுதடைந்து போயுள்ளன. அவற்றை உடனடியாகச் சீர்செய்ய வேண்டும். பொதுவாக அந்தந்த பகுதி ஆறுகள், காட்டாறுகள், ஏரிகள், குளங் கள், கண்மாய்கள் குறித்த விவரங்கள் அரசு அதிகாரிகளுக்கு முழுமையாகத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இதனால் பொதுப்பணித்துறை அதிகாரிகள், ஓய்வுபெற்ற பொறியாளர் கள் இவர்களுடன் அந்தந்த பகுதி விவசாயிகளையும் இணைத்து ஒரு கமிட்டி அமைக்க வேண்டும். வருடந் தோறும் அந்த கமிட்டி இதுபோன்ற வெள்ளக் காலங்களில் எவ்விதம் செயல்பட வேண்டுமென ஆக்கபூர்வமாக முடிவெடுக்க வேண்டும். ஸ்ரீரங் கம் வந்திருந்த முதல்வர் ஜெய லலிதா, அறுபத்தி நான்கு கோடி ரூபாய் செலவில் காவிரிக் கரைக்கு தடுப்புச்சுவர் எழுப்பப்படும் என அறிவித்துள் ளார். இதனை வெறும் காகித அறிவிப் பாக ஆக்கிவிடாது, மத்திய அரசின் நிதியுதவி பெற்று, வரும் கோடை காலத்திலா வது காவிரிக் கரைக்கு தடுப் புச்சுவர் எழுப்பிட வேண் டும்!” என்கிறார் முன்னாள் சட்டமன்ற மற்றும் மேலவை உறுப்பினரும், திருச்சி மாவட்ட காவிரிப் பாசன விவசாயிகள் நலச் சங்கத்தின் புரவலருமான வெங்கடேஸ் வர தீட்சதர்.



* வெங்கடேஸ்வர தீட்சதர்

கட்டுரை, படங்கள்:
**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# அது ஒரு கனாக் காலம்

வாடிய முகம், வதங்கிய பார்வையோடு, குவாரியில் கல்லுடைத்துக் கொண்டிருக்கும் இளம் கைதியாக தனுஷைப் பார்க்கிறபோதே ஃப்ளாஷ்பேக் எப்போது விரியும் என்கிற தவிப்பு வந்துவிடுகிறது.

நீண்ட நேரம் சோதிக்காமல், அவரைத் தப்பிக்க வைத்து, ஊட்டிக்குப் போகும் லாரியில் ஏற்றிவிடுகிறார் இயக்குனர்.

லிஃப்ட் கொடுத்த லாரி டிரைவரோ "மொளைச்சு மூணு இலை விடலே. அதுக்குள்ளே கொலை பண்றியா?'' என்று தப்பித்த கைதி பற்றிய செய்தியைப் பத்திரிகைகளில் படித்து மிரட்டுகிறார். கலங்கி அழுதபடியே தனது கனாக்கால நினைவுகளின் இனிப்பும் கசப்புமான முடிச்சுகளை அவிழ்க்க ஆரம்பிக்கிறார் தனுஷ்.

இளமையிலேயே வெம்பிப் பழுத்த ஒரு காதல். அதை அழுத்தமாகக் காட்ட முயன்று தோற்றுப் போகிறார் இயக்குனர். கதையின் போக்கில் அழுத்தமான திருப்பமாகத் தெரிவது லாக்-அப் கொலை. முன்பின் அறியாத சக லாக்-அப் கைதியுடன் மோதி, எதிர்பாராமல் அவன் இறந்துபோவதும் நாயகன் கொலையாளியாவதும் தமிழ் சினிமாவின் கதைப் பரப்புக்கு ரொம்பவே புதிது!

தமிழ் சினிமா கட்டியெழுப்பிய கவர்ச்சிக் கன்னிகளோடு கனவில் உருகும் சராசரி நடுத்தரக் குடும்பத்து இளைஞர்களின் பிரதிபிம்பமாக தனுஷ், தனது பாத்திரம் உணர்ந்து நடித்திருக்கிறார்.

சந்தர்ப்பம் கிடைத்தால் திமிறும் இளமையைச் செலவழிக்க விரும்பும் பலகீனத்தோடு நாயகன், நாயகி பாத்திரங்களை உருவாக்கியிருக்கும் இயக்குனர், அவர்களின் பலமாகக் காட்டுவது, எப்படியாவது மீண்டும் இணைந்துவிட வேண்டும் எனும் அவர்களின் துடிப்பைத்தான். இருப்பினும் அம்மாவின் மீது அளப்பறிய பாசத்தோடு, உணர்ச்சிப்பெருக்கில் தன்னைக் கைவிட்ட அப்பாவின் தவறை மன்னிக்கிற மனத்தோடு தனுஷைக் காட்டுவதால், அவரது கேரக்டர் ஓரளவு தப்பிக்கிறது.

படத்தில் யாருக்குமே மேக்-அப் இல்லாததும், இயற்கையான ஒளியில் படப்பிடிப்பு செய்திருப்பதும், பாலுமகேந்திரா யதார்த்தத்தின் மீது வைத்திருக்கும் தீவிரமான நம்பிக்கையைப் பார்வையாளன் மீது வலிந்து திணித்ததுபோல் இருக்கிறது. மிதமான கதையோட்டம், இதமான இசை சேர்ப்பு இரண்டும் தரமான ரசனையுள்ள ரசிகர்களை, மயிலிறகு போலத் தடவிக் கொடுக்கலாம். வேறு எதையோ எதிர்பார்த்து வருகிற முன்வரிசை ரசிகர்கள், கொட்டாவி விட்டபடிதான் படத்தை ரசிக்கிறார்கள். இவர்களை முதுகு சொறிந்துவிடுவது க்ளைமாக்ஸ் காட்சி மட்டும்தான்.

- லஜ்ஜாவதி










# காங்கிரஸான பா.ஜ.க!

**பா.ஜ.க**வின் பிரசித்தி பெற்ற கட்டுக்கோப்பும் நெடுங்காலமாக அக்கட்சியின் பெருமிதத்துக்குரிய அம்சமாக விளங்கிய உட்கட்சி ஜனநாயகமும் குழிதோண்டி புதைக்கப்பட்டு விட்டன. இக்கட்சியும் காங்கிரஸ் பாணியில் 'நியமன அரசியல்' குட்டையில் விழுந்துவிட்டது! இதற்கு மேலும் ஒரு சான்று உமாபாரதியின் இன்றைய ஆவேசம்!

பீஹாரில் கணிசமான இடங்களை பா.ஜ.க வென்றதற்கு ஒரு முக்கிய காரணம் உமாபாரதியின் பிரசாரம். பீஹாரில் 'ஜெயித்துக்காட்ட' அவரை அனுப்பி வைத்தது பா.ஜ.க தலைமை. சவாலை ஏற்று, தமது தடாலடி பிரசார முறைகள் மூலம் பா.ஜ.கவுக்கு 55 இடங்கள் கிடைக்கப் பெரிதும் உதவியவர் உமாபாரதி.

பீஹாரில் ஜெயித்துக் காட்டிவிட்டு மத்திய பிரதேசம் திரும்பியவருக்கு, அவர் எதிர்பார்த்த மலர்ச்செண்டு வரவேற்பு கிடைத்துவிடவில்லை; அம்மாநில முதல்வர் பதவியும் கிடைக்கவில்லை!

இரண்டு ஆண்டுகளுக்கு முன் தேர்தலில் வென்று ம.பி முதல்வராக அமர்ந்த உமாபாரதி, இட்கா மைதானத்தில் கொடியேற்றிய வழக்கு தொடர்பாக பதவி விலகினார். அந்த வழக்கில் அவர் குற்றவாளி என்று நிரூபிப்பதற்கான சான்றுகள் இல்லை என ஆன பிறகு, மீண்டும் அப்பதவியை



கல்கி



2005 டிசம்பர் 11
பார்த்திப கார்த்திகை 26
மலர் : 64
இதழ் : 19




ஏற்க முனைந்தார். அவரது முயற்சிகளால் கட்சிக்குள் எழுந்த சலசலப்பைச் சமாளிக்கத்தான் பீஹார் தேர்தல் பிரசாரத்துக்கு அவரைத் தலைவராக்கி அனுப்பியது கட்சித் தலைமை. திரும்பியதும் முதல்வராகி விடலாம் என உமாபாரதி எண்ணினார். ஆனால், சிவ்ராஜ் சிங் சௌஹான் முதல்வராக்கப்பட்டு விட்டார். ஜனநாயக முறையிலான தேர்வின் மூலம் சௌஹான் முதல்வராக்கப்பட்டிருப்பின் குற்றம் குறைக்கே இடமிருந்திருக்காது. ஆனால், சௌஹான், பா.ஜ.கவின் செல்வாக்கு மிக்க ஒரு சில பெருந்தலைகளின் நியமன முதல்வர்!

விளைவு...? கணிசமான தமது ஆதரவாளர்களுடன் கட்சிக் கூட்டத்திலிருந்து வெளியேறிய உமாபாரதி, கட்சித் தலைமை குறித்த தமது காட்டமான விமர்சனங்களை வெளியிட்டிருக்கிறார்.

அதுமட்டுமல்ல, கட்சித் தலைமை அதன் கோட்பாடுகளிலிருந்து விலகி எங்கோ சென்றுவிட்டதாகவும் 'ராம் - ரொட்டி' (ராமர் கோயில் கட்டுதல், அனைவருக்கும் உணவு கிடைக்கச் செய்தல்) என்ற பா.ஜ.கவின் மெய்யான குறிக்கோளை, தமது பிரிவினர் மட்டுமே கடைபிடிப்பதாகவும் ஆக்ரோஷமாகக் கூறியுள்ளார்.

கட்சித் தலைமையின் கோபத்துக்குக் கேட்க வேண்டுமா...? வாஜ்பாய் முதல் வெங்கையா நாயுடு வரை அனைவரும் உமாபாரதியைக் கண்டனம் செய்ததோடு, அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றியும் விட்டனர்!

உமாபாரதியின் அரசியல்பாணி, தடாலடியானதுதான்; சந்தேகமில்லை. அவர் ஒரு நல்ல நிர்வாகியாக, சிறந்த முதல்வராகச் செயல்படுவாரா என்பது கேள்விக்குறிதான். ஆனால், அவருடைய தடாலடியும் பரபரப்பு அரசியல் பாணியும் வோட்டுச் சேகரிப்புக்குத் தேவைப்படும்வரை, கட்சித் தலைமை பயன்படுத்திக் கொள்கிறது. பதவியில் அமர்த்துவது என்று வருகிறபோது, கட்சித் தலைமைக்கு கிலி பிடித்துக் கொள்கிறது! சக்திமிக்க தலைவர்கள் தனி ஆளுமையுடன் உருவாவதைத் தலைமை




விரும்புவதில்லை. ஆகவே உட்கட்சி ஜனநாயகத்துக்கு விடை கொடுத்துவிட்டு, தங்கள் வழிக்கு வரக்கூடிய நியமனத் தலைவர்களை அமர்த்துகிறது!

உட்கட்சி ஜனநாயகத்தைக் கடைபிடித்து முதல்வர் பதவிக்கு சட்டமன்ற கட்சி உறுப்பினர்களிடையே வாக்கெடுப்பு நடத்தினாலும், போட்டியாளர்களுள் செல்வாக்கும் பணபலமும் படைத்தவர் வெகு எளிதில் வென்றுவிடுகிற அவலச்சூழல் இன்று நிலவுகிறது. இவ்வாறு வெல்பவர் கட்சித் தலைமைக்கு வேண்டப்படாதவராக இருக்கக்கூடும் என்கிற 'அபாயம்' நிலவுகிறது.

பா.ஜ.க மட்டுமல்ல... அனேகமாக அனைத்து கட்சிகளிலும் இதே பிரச்னைதான்!

கட்சித் தலைமை சூழ்நிலைக் கைதியாகிவிட்டது என்று சொல்வதற்கில்லை. பொதுத் தேர்தலையொட்டி வேட்பாளர்கள் நியமனத்தின்போதே பணபலம், ஜாதி/மதச் சார்பு, குழுச் செல்வாக்கு போன்றவைதானே அடிப்படையாகக் கொள்ளப்படுகின்றன. வோட்டுகளைப் பெறும் நோக்கில், தகுதியைக் காட்டிலும் இவை முக்கியமாகிறபோது, தேர்தலில் ஜெயித்து எம்.எல்.ஏக்களாக அமரும் நபர்களின் தரமும் தாழ்ந்தே காணப்படுகிறது.

பணத்துக்கும் அதிகாரத்துக்கும் ஆசைப்பட்டு கட்சி மாறும் கேவலம்தான் அரசியலில் இருந்தது என்றால், இப்போது அதே பணத்துக்காகவும் அதிகாரத்துக்காகவும் கோஷ்டி மாறுகிற படுகேவலமும் சேர்ந்துவிட்டது.

கொம்பு சீவப்பட்டு வளர்க்கப்படுகிற கடாக்கள் மார்பில் பாய்கின்றனவே என வருந்திப் பயனில்லை. நியமன அரசியலால் நிரந்தர அமைதியும் கட்சிக் கட்டுக்கோப்பும் விளையாது. அரசியலின் ஆணிவேர் தூய்மையானாலொழிய பிரச்னை தீராது. அறிவாற்றலுக்கும் தகுதிக்கும் நேர்மைக்கும் கட்சிகள் முக்கியத்துவம் தர ஆரம்பித்தால், நல்லவர்களும் திறமையானவர்களும் அரசியலில் பணியாற்ற மகிழ்ச்சியோடு முன்வருவர்.

○




**நா**ன் குழந்தையாக இருந்தபோது என்னை ஓர் உறவினர் வீட்டில் விட்டுவிட்டு அம்மா கச்சேரி பாடுவதற்குப் போய் விடுவாள். நான், "அம்மா வேணும், அம்மா வேணும்" என்று அந்த உறவினர்களைப் பாடாய்ப் படுத்திக் கொண்டிருப்பேன். சாப்பிட மாட்டேன்; தூங்கவும் மாட்டேன். வாசலில் ஹாரன் சத்தம் கேட்டதோ இல்லையோ, ஓடிப்போய் காரில் அம்மா மடியில் உட்கார்ந்து கொள்வேன். அம்மா, தனக்குப் போடப்பட்ட மலர் மாலையை மறுபடி அணிந்து கொள்வாள். என் தோள்களுக்கு மேலாக விழுமாறு அதைச் சரிசெய்து, "உனக்கு மாலை வாங்கி வரத்தான் போயிருந்தேன், கண்ணா!" என்பாள். நான் பெருமையில், சந்தோஷத்தில் பூரித்துப் போவேன்.

**அ**ம்மா தன் இறுதி நாட்களை நெருங்கிக் கொண்டிருந்த சமயம். உடல் நலம் குன்றியிருந்தாள். ஒருநாள் என் கையில் நான் அடுக்கிக் கொண்டிருந்த வளையல்களை அன்புடன் வருடிக் கொடுத்தாள். "கலர் மேட்சிங்கா, ரொம்ப அழகா இருக்கு" என்றாள். நான் என் கரத்திலிருந்து வளையல்களை ஒவ்வொன்றாகக் கழற்றி, அம்மாவுக்கு அணிவித்தேன். அவள் கரங்களை அலங்கரித்த வளையல்களை வருடி, "இப்ப இன்னும் அழகா இருக்கு" என்று சொன்னேன். அம்மா குழந்தைபோல் சிரித்தாள்.

அந்தச் சமயம், நான் குழந்தையாக இருந்தபோது, அம்மா என்னை மடியில் அமர்த்திக்கொண்டு அணைத்தபடி மலர் மாலை போட்டுக்கொண்ட தருணங்கள் நினைவுக்கு வந்தன. அம்மா எதிரே அழாமல் இருக்க ரொம்பக் கஷ்டப்பட்டுப் போனேன். இப்போது இதை எழுதும் போதும்தான்.

**எ**னக்கு வயது கூடி அறிவுபூர்வமாகச் சிந்திக்க ஆரம்பித்ததிலிருந்து, அம்மா ஓர்

# அம்மா!

அவதாரம் என்ற முடிவுக்கு வந்து இன்றுவரை அப்படியே கருதி வருகிறேன். ராமாவதாரத்தில் இறைவன் மனித ரூபத்தில் வந்து, ஒரு இலட்சிய மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியதாகப் பெரியோர்கள் சொல்வார்கள். லக்ஷ்மி தேவிதான் சீதா பிராட்டியாக அவதாரமெடுத்ததாகவும் கூறுவார்கள். லக்ஷ்மியும் சரஸ்வதியும் இணைந்த ஓர் அவதாரம் உண்டென்றால் அது அம்மாவாகத்தான் இருக்க முடியும். அவள் சுபாவமும் சரி, பாட்டும் சரி இதனை உறுதிப்படுத்துகின்றன.



அம்மாவுக்கு அன்பு தவிர வேறுவித மனித குணங்கள் இருந்ததாகவே எனக்குத் தோன்றவில்லை. நாங்கள் கடமை தவறினால் அம்மாவுக்குக் கோபம் வரும். ஆனால் கோபித்துக்கொள்ளத் தெரியாது! இதனால் ரொம்ப தவித்துப் போவாள். இந்தத் தவிப்பை அவளுக்குத் தரக் கூடாது என்பதற்காகவே கூடியவரை வீட்டில் அவள் எங்களுக்கு

**விஜயா ராஜேந்திரன்**



• விஜயா - ராதாவுடன் எம்.எஸ்

விதித்திருந்த கடமைகளை ஒழுங்காகச் செய்து வந்தோம்.

அப்படியொன்றும் பிரமாத காரியங்கள் இல்லை. வீட்டுச் செலவுகளுக்கு ஒழுங்காகக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும் (கணக்கை அப்பாவோ, அம்மாவோ சரி பார்த்ததே இல்லை என்பது வேறு விஷயம்). வெள்ளிக்கிழமைகளிலும், பூஜை - பண்டிகை தினங்களிலும் ஸ்வாமி அலமாரியைச் சுத்தப்படுத்தி அலங்கரித்து வைக்க வேண்டும். அதே நாட்களில் வீணை - தம்புரா அலமாரியை சுத்தம் செய்து சாம்பிராணி போட்டு பூ வைக்க வேண்டும். விருந்தினர் வரும்போது அழுது வடிந்து கொண்டிராமல்

பளிச்சென்று டிரெஸ் பண்ணிக்கொண்டு வரவேற்று உபசரிக்க வேண்டும். கச்சேரியில் சளைக்காமல் தம்புரா போட்டு, அவ்வப்போது இதமான சூட்டில் ஒரு வாய் பால் அருந்துமாறு டம்ளரை நாசூக்காக அவன் முன் நகர்த்த வேண்டும்... இப்படி இன்னும் சில.

அம்மாவின் அன்பு எல்லோரிடமும் சமமாகப் பாயும். என் சகோதரி ராதாவிடமும் என்னிடமும் எப்படி அன்பு செலுத்தினாளோ, அதே அளவுக்கு, வீட்டோடு வளர்ந்த அப்பாவின் மருமான் ராமச்சந்திரன், மருமாள் தங்கம் ஆகியோரிடமும் அன்பு செலுத்துவாள். சின்ன வயதிலேயே எங்கள் குடும்பத்துடன் இணைந்த அனந்தநாராயணன், (பம்பாய்) கண்ணன் ஆகியோரும் அதே அன்பைப் பெற்றனர்.

பௌர்ணமியையொட்டி குழந்தைகளுக்கு மொட்டை மாடியில் நிலாச் சாப்பாடு உண்டு. கையை நீட்டச் சொல்லி பிடி பிடியாக சித்திரான்னங்களை உள்ளங்கையில் எடுத்து வைப்பாள்.

லக்ஷ்மிகரமான முகத்துடன் விளங்கி, இசையின் பயனாகக் கிடைத்த செல்வத்தையெல்லாம் கணவர் வாரி வழங்கியதைப் பார்த்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த அம்மாவுக்கு, உண்மையிலேயே ரூபாயின் மதிப்பு தெரியாது. ரொம்ப நாள் வரை இரண்டு ரூபாய் நோட்டுக்கட்டை வைத்துக்கொண்டு ஒவ்வொரு நோட்டாக விசேஷ தினங்களில் எளியோருக்கு இனாம் விநியோகித்து வந்தாள். ஒரு கட்டத்தில், ''அம்மா! இப்போதெல்லாம் ரெண்டு ரூபாய் நோட்டுக்கு மதிப்பே கிடையாது; இருபது ரூபாய் நோட்டுக் கட்டு வைத்துக் கொள்'' என்று சொல்லித்தர வேண்டியிருந்தது.

சங்கீதம் என்ற செல்வமே போதும். வேறு சொத்து தேவையில்லை என்று அப்பாவும் அம்மாவும் கருதியது போல்தான் நடந்து கொண்டார்கள். பெண்ணாய்ப் பிறந்தும்கூட அம்மா நகைகளுக்கு ஆசைப்பட்டதே இல்லை. கொடுப்பதில் தான் சந்தோஷம் அடைந்தாள்.

எளிய குடும்பத்தில் பிறந்து வளர்ந்து கஷ்டப்பட்ட நாட்களை அம்மா என்றுமே மறந்தது கிடையாது. தினம் நாலு அணா (25 காசு) உண்டியலில் போட்டு வருவாள். கோயிலுக்குப் போக நேரும்போது எடுத்துப் போய் காணிக்கை செலுத்துவாள்.

சம்பிரதாயங்களை விடவே மாட்டாள். கருகமணி மாலை போட்டுக் கொள்வது நல்லது; கண்ணாடி வளையல் அணியாமல் இருக்கக்கூடாது; வெள்ளிக் கிழமைகளில் கண்டிப்பாக வெற்றிலை போட்டுக்கொள்ள வேண்டும் என்பது போன்ற மரபுகளைச் சட்டம் போலவே அனுசரித்து வந்தாள். விநாயக சதுர்த்தி, சரஸ்வதி பூஜை போன்றவற்றுக்கு என்னென்ன நைவேத்தியம் என்பது அத்துப்படி. ஒன்று குறையக்கூடாது. விநாயக சதுர்த்தி என்றால், 'வாரணமுகவா' பாடாமல் இருக்க மாட்டாள். சரஸ்வதி பூஜையன்று 'வெள்ளைத் தாமரை' பாடியே ஆக வேண்டும். ஒவ்வொரு நாளும் அந்தக் கிழமைக்கு ஏற்றதான நவகிரக கீர்த்தனைகளில் ஒன்று நிச்சயம் வீட்டில் ஒலிக்கும். ''வெள்ளிக் கிழமைகளில் கல்யாணி பாடுவது நல்லது'' என்று மகா பெரியவா ஒருதரம் சொல்லிவிட்டார். அதை விடாமல் கடைப்பிடித்து வந்தாள். ஸ்ரீசத்ய சாயி பாபா படத்துக்கு முன்

• சளைக்காமல் தம்பூரா போடவேண்டும்...



ஆரத்தி எடுத்து, ஆரத்தி பாட்டுப் பாடாமல் ஒரு நாள் நகர்ந்ததில்லை. வீணையில் ஒரு கீர்த்தனையாவது தினம் வாசிக்க வேண்டும். இப்படிப் பல நியமங்களை வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்தாள்.



• விருந்தினர் வரும்போது...

அம்மாவின் மனம் தயை நிறைந்தது. நாலரை மணி நேரம் கச்சேரி செய்து களைத்துப் போயிருப்பாள். அப்பா ஒரு நண்பர் வீட்டில் இரவு சாப்பாட்டுக்கு வருவதாக வாக்களித்திருப்பார். சோர்வுடன் அங்கே போனால், ஒரு வயதான அம்மாள், "உங்க பாட்டைக் கேட்கணும்னு ரொம்ப ஆசை. ஆனா கச்சேரிகளுக்கு வர முடியறதில்லே; தள்ளலை" என்பாள். அந்த மூதாட்டிக்காக அந்தக் கணமே அம்மா பாடுவாள்.

என் சகோதரி ராதாவுக்கும் எனக்கும் கல்யாணமாகி, அம்மாவுக்குப் பேரன், பேத்திகளைப் பெற்றெடுத்துத் தந்து மகிழ்வித்தோம். எங்களுக்குப் பேறு காலம் என்றால், அம்மா மூன்று மாதங்களுக்குக் கச்சேரி ஒப்புக்கொள்ளவே மாட்டாள். எவ்வளவு முக்கியமான கச்சேரியாக இருந்தாலும் மறுத்து விடுவாள். மாதாந்திர செக்-அப்புக்கு என்னை டாக்டரிடம் தானே அழைத்துப் போவாள். டாக்டர் ஈ.வி.கல்யாணியைப் பார்க்க என்னைப் போல் பல பெண்கள் காத்திருப்பார்கள். அம்மாவைப் பார்த்ததும் எல்லோருமே சந்தோஷம் தாங்காமல் "நீங்க முன்னாடி போங்க" என்பார்கள். அம்மா மறுத்து விடுவாள். டோக்கன் வாங்கிக்கொண்டு என்னுடன் உட்கார்ந்து காத்திருப்பாள். பேரனையோ, பேத்தியையோ கால் மேல் போட்டுக்கொண்டு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவது என்றால் அசாத்திய பிரியம்!

வீட்டுக்கு வரும் விருந்தினருடன் பெண் குழந்தை வந்தால், "பாட்டுக் கத்துக்கறியா? எங்கே ஒரு பாட்டுப் பாடு, பார்ப்போம்" என்று சொல்லாமல் இருக்கவே மாட்டாள் அம்மா. அந்தச் சிறுமி எப்படிப் பாடினாலும் சரி, "பேஷ்! சிரத்தையாகப் பாடு. உனக்குப் பாட்டு நன்னா வரும்" என்று சொல்லி தலையில் கைவைத்து ஆசீர்வதிப்பாள். குழந்தையின் பெற்றோர் பரவசப்பட்டுப் போவார்கள்.

வருகிறவர்களை, "என்ன சாப்பிடுகிறீர்கள்?" என்று அம்மா கேட்காமல் இருந்ததே கிடையாது. கொஞ்சம் அனுபவமுள்ளவர்கள் 'சுக்கு காபி' கேட்டு வாங்கி அருந்துவார்கள். அது அம்மா வீட்டு ஸ்பெஷாலிட்டி.

சிறந்த குடும்பத் தலைவியாக இருக்க வேண்டும் என்பதே அம்மாவின் முதல் ஆசை. பதிக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தால் போதும் என்ற மனநிலைதான் அவளுக்கு. அப்பாதான், "உன் சங்கீதம் உன்னுடைய சொத்து இல்லை. அது உலகத்துக்கே உரியது. அதை எல்லோருக்கும் வாரி வழங்க வேண்டியது உன் கடமை" என்று அடிக்கடி வற்புறுத்திக் கூறி அவளை திசை திருப்பினார்.

அம்மா காலமானபோது சோனியா காந்தி வெளியிட்ட இரங்கல் செய்தி என்னை ரொம்பக் கவர்ந்தது. "எம்.எஸ். மூன்று விஷயங்களில் எல்லோருக்கும் எடுத்துக்காட்டாக விளங்கினார். செய் நேர்த்தி; நாட்டுப் பற்று; ஈகைக் குணம்" என்றார். இந்த மூன்று விஷயங்களிலும் அம்மாவை உருவாக்கியது அப்பாதான்.

அம்மாவுடைய தெய்வாம்சம் என்பது சங்கீதத்திலும் பிரதிபலித்தது. அவளுடைய பயபக்தி பாட்டில் பொதிந்திருந்ததால், அவள் மட்டுமின்றி ரசிகர்

களும் பக்திப் பரவசத்தில் ஆழ்ந்தார்கள். ஆனால் தெய்வாம்சம் இந்த ஒரு விஷயத்தில் மட்டுமல்ல, வேறு நிகழ்வுகளிலும் உண்டு.

மீரா திரைப்படப் பாடல்களுக்கு எஸ்.வி.வேங்கடராமன் மெட்டமைத்தார். செம்மங்குடியிடம் அம்மா எவ்வளவோ கற்றுக் கொண்டாள். பாபனாசம் சிவன், மாயவரம் கிருஷ்ண அய்யர், முசிறி போன்றோரெல்லாம் அம்மாவுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள் சீனிவாச ராவ், திலிப்குமார் ராய், சித்தேசுவரி தேவி கௌதம் ஆகியோரிடமெல்லாம் பஜன்கள் கற்றுக்கொண்டாள். 'குறையொன்றும் இல்லை' போன்ற பல பாடல்களுக்கு, கடையநல்லூர் வேங்கடராமன் இசை அமைத்துக் கொடுத்திருக்கிறார். கே.வி. நாராயணசாமியிடம் மாயம்மா, ஜகதோதாரண போன்ற பாடல்களை அம்மா பயின்றாள். இன்னும் எத்தனையோ பேர். ஏன், காந்தியடிகளின் கடைசி மகனாகிய தேவதாஸ் காந்தி, 'கஹாங்கே பதக்' என்ற துளசிதாஸர் பாடலைப் பாடுவதைக் கேட்டு அவரிடம் கற்றுக்கொண்டு அம்மா பாடியிருக்கிறாள்.

ஆனால் இவர்கள் எல்லாம் பாடியது போலவா அம்மா பாடினாள்? இவர்களிடம் இருந்த இசையையும் பாடல்களையும் அவற்றின் பொருளையும் அப்படியே கிரகித்துக் கொண்டு, அவற்றை எம்.எஸ். பாணிக்கு உருமாற்றி, உன்னத நிலைக்கு உயர்த்தி நம்மையெல்லாம் சொர்க்கானுபவத்தைப் பெறச் செய்தாள் அல்லவா? அதுதான் தெய்வத்தன்மை.

பாரத நாட்டில் எத்தனையோ ஆறுகள் ஓடுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒரு தனிச் சிறப்பு, அழகு உண்டு. ஆனால் இந்து மகா சமுத்திரத்தில் அவை ஐக்கியமான பிறகு, அந்தச் சமுத்திரத்தின் கம்பீரம் மட்டும்தானே நமக்குத் தெரிகிறது! அம்மா எல்லோரிடமும் சங்கீதத்தைக் கிரகித்து தனதாக்கிக் கொண்டது இப்படித்தான்.

இத்தனைக்கும் அம்மாவுக்கு 'தியரி' தெரியாது. இசையில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டங்கள் பெற்றவள் அல்ல. ஆனாலும் மேளகர்த்தா ராக சக்கரங்களை மேதைகளே அதிசயிக்குமாறு அவளால் பாடிப் பதிவு செய்ய முடிந்தது. இது சரஸ்வதி கடாக்ஷம் தானே!

அம்மா கமாஸில் ப்ரோசேவா பாடிக் கேட்ட வாசுதேவாச்சாரியார் என்ன சொன்னார்? "நான் பெற்றெடுத்த குழந்தைதான் இந்தப் பாடல். என்றாலும் நீங்கள் பாடியபோது, அந்தக் குழந்தைக்குக் கல்யாண வயதாகி, சர்வாலங்கார பூஷிதையாக திருமணத்துக்குத் தயாராக நிற்பது போல் தோன்றியது" என்று சொல்லி மகிழ்ச்சியில் பூரித்துப் போனார் அல்லவா!

இந்தியாவின் பல்வேறு மொழிகளில் பாடினாள் அம்மா. ஆங்கிலத்திலும் ராஜாஜி இயற்றிய பாடலை ஐ.நா. சபையில் பாடினாள். அந்தந்த மொழிக்காரர்கள் அவளுடைய உச்சரிப்பு சுத்தம் கண்டு பிரமித்தார்கள். அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார், "விஷ்ணு சகஸ்ரநாமத்தை என் போன்ற அக்னிஹோத்ரிகளால் கூட இவ்வளவு ஸ்பஷ்டமாக உச்சரிக்க முடியாது" என்று மனம் விட்டுச் சொன்னார். இது தெய்வானுகூலமின்றி நடக்கக் கூடியதா?

அவளுடைய பாட்டில் ரஸிகர்கள் உயிரையே வைத்திருந்தார்கள். எல்லா பாட்டுக்களையும் விரும்பிக் கேட்

• குடும்பத் தலைவியாக இருக்கவே ஆசை...





• எல்லோரிடமும் சமமாகப் பாயும் அன்பு...

பார்கள் என்றாலும் ஒவ்வொரு காலகட்டத்தில் ஓரொரு பாட்டுக்கு வரவேற்பு மிகுதியாக இருக்கும். ஆரம்ப நாட்களில் மாயே...(தரங்கிணி) மாரமணன்... (ஹிந்தோளம்) சரகுணபாலிம்ப... (கேதாரகௌளை) இப்படிச் சில. இடைப்பட்ட காலத்தில் சங்கராபரணம் வேறு எம்.எஸ். வேறு என்றில்லாமல் அப்படி அம்மாவுடன் அந்த ராகம் ஒன்றிப் போனது. ஒரு நன்கொடை கச்சேரிக்கு ஐயாயிரம் ரூபாய் டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்திருந்த திரு. ஏ.எம்.எம். அருணாசலம், அப்பாவிடம், "நான் கொடுத்த ரூபாய் ஐயாயிரம் இந்த சங்கராபரணத்துக்கே சரியாய்ப் போய்விட்டது. பாக்கி கச்சேரியெல்லாம் எனக்கு இலவசம்தான்!" என்றார். "ஆடு ராட்டே" பாடினால் அந்தச் சுதந்திர தாகம்மிக்க நாட்களில் கைதட்டல் விண்ணைப் பிளக்கும். பின் நாட்களில் அம்மா 'ஜகதோ தாரண பாடமாட்டாரா?' 'அகிலாண்டேசுவரி (துவஜாவந்தி) பாடமாட்டாரா?' என்று ரசிகர்கள் ஏங்கிக் காத்திருப்பார்கள். ஆனால் ஒன்று... "காற்றினிலே வரும் கீதம்" என்று அம்மா ஆரம்பித்தாலே கரவொலி எழுப்பி மகிழ்வார்கள்! முடிவிலும் கைதட்டி பாராட்டுவார்கள். அந்த ஒரு பாடலுக்கு மட்டும் அப்படி ஒரு தனி மவுசு!

**உ**லகளாவிய பேரும் புகழும் பெற்ற பிறகும்கூட அம்மா ஒரு மாணவியாகவே இருந்தாள். செம்மங்குடி ஒரு பாட்டை எழுதிக் கொடுத்திருந்தால்கூட அதை மறுபடி ஓரிருமுறை தானே தன் கைப்பட பதம் பிரித்து, பொருளுணர்ந்து எழுதிப் பார்ப்பாள். பிறகு பாடிச் சாதகம் பண்ணுவாள். எந்த ஒரு கச்சேரியிலும் ஒரு பாட்டை எழுதி, எதிரே வைத்துக் கொண்டு அம்மா பாடியதில்லை.

கடைசிவரை தானே கற்றுக் கொண்டே இருந்ததால்தானோ என்னவோ, சிடர்கள் என்று அம்மா யாரையும் உருவாக்கவில்லை. அவ்வப்போது மேடையில் அவளுக்கு உதவியாக ராதா, கௌரி அல்லது நான் பாடியது உண்டு. அம்மா கற்றுக்கொண்ட போதும், பாடிய போதும் கேட்டுப் பழகிய அனுபவத்தில் அவளுக்கு அனுசரணையாகப் பாடினோமேயன்றி முறையாக அவளிடம் நாங்கள் சங்கீதம் பயின்றதில்லை. இதனால் ஒன்றும் குறைந்துபோய் விடவில்லை என்பதுதான் என் கருத்து. ஏனென்றால் அம்மாவின் பாட்டு ஒப்புயர்வற்றது. அவள் பெயரைச் சொல்லிக் கொண்டு யாரும் பாடிப் பெயரெடுப்பது என்பது நடக்காத காரியம். நடக்க முடியாத காரியம் நடக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் அதற்கு முயற்சி மேற்கொள்வதும் வீண் அல்லவா?

இதைப்பற்றி நினைக்கும்போது என் மாமனார் அமரர் கல்கி, 'வீணை பவானி' கதையில் எழுதியுள்ள வரிகள்தாம் எனக்கு நினைவு வரும். (கல்கி வாசகர்கள் இந்தக் கதையை இந்த இதழிலிருந்து படிக்க ஆரம்பிப்பார்கள் என்று நினைக்கிறேன்.) அமரர் கல்கி எழுதுகிறார்...

***'பவானியை மற்ற மனிதர்களைப் படைத்ததுபோல் பிரம்மா படைக்கவில்லை. கல்யாணியையும் மோகனத்தையும் செஞ்சுருட்டியையும் சேர்த்துப் படைத்திருக்கிறார்... பவானி செத்துப் போகும்போது அவளுடைய உடம்பு அப்படியே கரைந்து உருகி (பல்வேறு) ராகங்களாகப் போய்விடும்.'***

அமரர் கல்கியின் இந்த வரிகள் அம்மா விஷயத்தில் அப்படியே மெய்யாகி உள்ளதாகத்தான் நான் நினைக்கிறேன். ○



''அந்த டாக்டரை கைராசி இல்லாதவர்னு நான் சொன்னது எப்படியோ அவருக்குத் தெரிஞ்சு போயிடுச்சு...''

''அப்புறம்...?''

''எங்கிட்ட 'இன்சல்ட்டிங் ஃபீஸ்' வசூல் பண்ணிட்டார்...''

- கே. ஆனந்தன்




'' இது நிச்சயம் போலீஸ்காரர் வீடாத்தான் இருக்கும்!''

- சீர்காழி வி. ரேவதி



''டாக்டர், என்னை நாய் கடிச்சிடுச்சு.''

''எந்த இடத்துல?''

''பெருமாள் கோயில் சந்துல டாக்டர்!''

- விஜயாரவி





''இந்த ஹாஸ்பிடல்ல உங்களுக்கு என்ன குறை இருக்கு?''

''அடிக்கடி என் மனைவியை உள்ளே விட்டுர்றாங்க டாக்டர்!''

- அம்பை தேவா

''தீபாவளிக்கு உங்க குடும்ப டாக்டரு, வக்கீலுக்கெல்லாம் புது டிரஸ் வாங்கிக் குடுத்துருக்கியே... அடிக்கடி உன் வீட்டுக்கு வந்துபோற 'குடும்பத் திருடன்' எனக்கு ஒரு லுங்கி, பனியன் வாங்கித்தர துப்பு இல்லையா உனகுகு?

- கிரிஜா மணாளன்





''உங்க பையன் ரஜினி ரசிகனா?''

''ஆமா! எப்படி கரெக்டா சொல்றீங்க?''

''ஜி.சிவாங்கற தன் பேரை 'சிவாஜி'ன்னு எழுதியிருக்கானே.''

- விஜயாரவி



விஜயகாந்த் பேசுகிறேன்!

7

டி.பிரிட்டோ ஸ்கூல்ல என்.சி.சில சேர்ந்ததும் பெண்டெடுக்க ஆரம்பிச்சாங்க. அதுலேர்ந்து தப்பிக்கறதுக்காக 'உடம்பு சரியில்ல'ன்னு ஒரு பொய் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்து என்.சி.சில இருந்து விலகிட்டேன். இதிலர்ந்து வந்துட்டாலும் வேற ஏதாச்சும் விளையாட்டுல நம்ம திறமையை நிரூபிக்கணும்னு நெனச்சேன்.

அப்ப எனக்கு ஃபுட்பால் விளையாடுறதுல இன்ட்ரஸ்ட் ஜாஸ்தியானது. என்னோட ஹைட், வெய்ட் ரெண்டும் ஃபுட்பாலுக்குப் பொருத்தமாயிருந்தது. படிப்படியா பயிற்சி எடுத்து நல்லா விளையாட ஆரம்பிச்சேன்.

பட்டுக்கோட்டையைச் சேர்ந்த பாஸ்கர் பிரதர்ஸ் டீம்ல சேர்ந்து விளையாடியிருக்கேன். அவங்க எனக்கு இன்னும் நண்பர்களாயிருக்காங்க. தினம் சாயங்காலம் நாலு மணியாச்சுன்னா ஃபுட்பால் விளையாடப் போயிடுவேன். போகப் போக அந்த டீம்ல எனக்கு நல்ல பேர் கிடைச்சது. மாவட்ட ரீதியா போய் ஆடுவோம். என்னை எப்பவும் தடுத்து ஆடுறதுக்குத்தான் போடுவாங்க. நானும் நம்பிக்கையை வீணடிக்க மாட்டேன்.

இப்படி ஸ்போர்ட்ஸ்லயும் படிப்புலயும் ஒழுக்கத்துலயும் நல்ல ஸ்டூடண்டாக, இருந்த என் வாழ்க்கையில ஒரு சுனாமி மாதிரி 1968-ல் இந்தி எதிர்ப்புப் போர் நுழைஞ்சது.

தமிழ்நாடே இந்தி எதிர்ப்பில் கொதித்துக் கிடந்தது. அப்ப எட்டாங் கிளாஸ படிச்சுட்டிருந்த நானும் தமிழ் மீது பற்றுதல் கொண்ட சக மாணவர்களும் எதிர்க்கக் கிளம்பினோம். எங்க ஹைஸ்கூல் பக்கம் வந்த அரசுப் பேருந்துகள் மீது கல்லெறிஞ்சோம்.

குறிப்பா கவர்ன்மெண்ட் பஸ்கள் மேல கல்லெறிஞ்சதுக்குக் காரணம், அந்த பஸ்களின் மேல் இந்தி, இங்கிலீஷில் எழுத்துக்கள் எழுதியிருந்ததுதான். அதுதான் இந்தளவுக்குக் கோபம் கொள்ள வைத்தது. 'தமிழ்நாட்டில் ஓடும் பஸ்ஸில் தமிழில் எழுதாமல் அதென்னடா இங்கிலீஷில், இந்தியில் எழுதுறீங்க'ன்னு பயங்கரமா

# கலங்கிய கண்கள்..










சவுண்ட் விட்டோம்.

அந்தச் சமயத்தில் தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, கலைஞர் போன்றவர்களின் இந்தி எதிர்ப்பு மேடை முழக்கங்களும், பத்திரிகைச் செய்திகளும் எங்களை ஆர்வம்கொள்ள வைத்தன. தமிழ்மீது வெறிகொள்ள வைத்தன.

நடு ரோட்ல உட்கார்ந்து சாலை மறியல் பண்றது. 'இந்தி ஒழிக, தமிழ்

வாழ்க'ன்னு கோஷம் போடுறது. இந்தி எழுத்துக்கள் மேல் தார் பூசறது, சாணி அடிக்கிறது. மறைஞ்சு நின்னு இந்தி கிளாஸ் டீச்சர் மேல கல்லெறியறது. இந்திப்பாடம் நடத்த விடாம டீச்சரை வழி மறிக்கறதுன்னு ஒரே அட்டகாசம்தான். இதனால சில இந்தி வாத்தியார்கள் பிரம்பெடுத்து என்னை விளாசியிருக்காங்க.

"டேய் விஜயராஜ்! பார்த்து நடந்துக்கோ. இதனால உன் படிப்பு பாதிக்கும்டா"–சார்லஸ் அய்யா சொன்னார்.

ஹெட்மாஸ்டர் அருள்பிரகாசம் என்னைக் கூப்பிட்டுக் கண்டிச்சார், "நீ பண்றது சரியில்லே. நீ தப்புப் பண்றதோடு மத்த பசங்களையும் கெடுக்குறே. இப்படியே பண்ணிட்டிருந்தே... டி.சியைக் கிழிச்சுக் கையில கொடுத்து அனுப்பிடுவேன்"னார்.

"நான் கெடுக்கறேன்னு சொல்லாதீங்க. தமிழ் உணர்வுள்ளவங்க அப்படி நடந்துக்கறாங்க!"னு ஹெட்மாஸ்டரை எதிர்த்துப் பேசினேன்.

மறுநாளே அப்பா வரவழைக்கப்பட்டார். "வியாபாரத்தைப் பார்ப்பேனா... உன்னோட பஞ்சாயத்தைப் பார்ப்பேனா... ஏன்டா இப்படி பண்றே..?" என்று கேட்டு அடிக்க ஆரம்பிச்சுட்டார், "இனிமேல் இப்படி பண்ணலேப்பா. ஒழுங்கா படிக்கிறேன்"னு சொல்ல, அப்பா அடிக்கிறதை நிறுத்தினார். "நல்லா படிச்சு பெரிய ஆளாகு. இதுதான் நீ எனக்குக் கொடுக்கற சந்தோஷம்"னு சொல்லிட்டு, ஹெட்மாஸ்டரைப் போய்ப் பார்த்துப் பேசிட்டு ஊருக்குப் போனார்.

டி.பிரிட்டோ ஸ்கூல்ல நல்ல டீச்சிங் கொடுத்தாங்க. ஒரு டிஸிப்ளின் இருந்தது.

* அண்ணா சமாதியில்...




## விஜயகாந்த் பற்றி
# வி.ஐ.பி!

**'வெற்றி'காந்த்!**

ஒரு சராசரி ரசிகராக இருந்து சினிமாவை ரசித்தவருக்கு இன்று தமிழகம் முழுவதும் ஏராளமான ரசிகர்கள் இருக்கின்றார்கள் என்ற வகையில் 'வெற்றி'காந்த்தாக திகழ்கிறார் நண்பர் விஜயகாந்த். இந்த வெற்றியின் பின்னணியில் இருப்பது அவரது அயராத உழைப்பு.

தமிழ் சினிமாவில் 'செவத்த'தோல் என்றால், ஒரு கிரேஸ் உண்டு. அதை உடைத்தெறிந்து, இன்று வெற்றிக்கொடி நாட்டியிருப்பவர்களில் ரஜினி,

விஜயகாந்த், விஜய் மூவரும் குறிப்பிடத் தக்கவர்கள். தமிழ் மண்ணுக்கேயுரிய நிறத்தைக் கொண்ட மதுரைக்காரர் விஜயகாந்த். தனது நிறம் கறுப்பு என்பதால் திரையுலகில் அடியெடுத்து வைத்த போது சந்தித்த கஷ்டங்களை மறைக்காமல் சொல்லியிருக்கிறார்.



• படம்: ஸ்ரீஹரி

தமிழில் மட்டுமின்றி பிற மொழிகளிலும் விஜயகாந்த் படங்களுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. இதில் பெரும்பாலானவை ஆக்ஷன் படங்களே. ஒரு காலத்தில் சண்டைக்காட்சிகள் 'டூப்' போட்டு எடுப்பார்கள். நண்பர் விஜயகாந்த் படங்கள் அந்த ரகமில்லை, சண்டைக் காட்சிகளில் ரிஸ்க் எடுக்கும் நடிகர்களில் முதலிடத்தில் இருப்பவர் அவர். எதிராளியின் தோளைப் பிடித்துத் தாவி, அப்படியே சுவரில் கால் வைத்துத் திரும்பி, ஒரு 'கிக்' விடுவாரே... அது விஜயகாந்துக்கு மட்டுமே உரிய கம்பீரமான ஸ்டைல்!

திரையுலகச் சாதனையைத் தாண்டி, மனிதநேய மிக்க மனிதராக உயர்ந்து நிற்கிறார், திரைத்துறையில் கேப்டனாக விளங்கும் நண்பர் விஜயகாந்துக்கு 'நக்கீரன்' சார்பில் ஒரு சல்யூட்!

**- நக்கீரன் கோபால்**

ஃப்ரீடமும் இருந்தது. ஸ்போர்ட்ஸ்ல நல்ல பயிற்சி கொடுத்தாங்க. இதெல்லாம் பார்த்து எனக்கு அந்த ஸ்கூலை விட மனசு வரல. அதனால கொஞ்சநாள் படிப்புல மட்டும் கவனம் செலுத்தி வந்தேன். ஆனா அது அதிகநாள் நீடிக்கல.

மறுபடியும் வேதாளம் முருங்கை மரம் ஏறிய கதையானது. பெரியார், அண்ணா, கலைஞர், கண்ணதாசன் போன்ற தலைவர்களின் போராட்டங்களும் இந்தி எதிர்ப்பு அறிக்கைகளும், முழக்கங்களும் எங்களை உணர்ச்சி வசப்பட வைத்தன. அப்புறமென்ன, மறுபடியும் எங்களது போராட்டம் ஆரம்பமாச்சு.

ஸ்டேட் பஸ்ஸோடு எங்க கோபம் நிக்கலை. ராம்நகர் பக்கம் வந்த கார், லாரி, பஸ் மேலே எல்லாம் நாங்க கல்லெறி நடத்த, விஷயம் போலீஸ்வரை போனது. எங்கப்பா மறுபடியும் வரவழைக்கப்பட்டார். என்னைப் பின்னி எடுத்துட்டார்.

ஹெட்மாஸ்டர் டி.சி.யைக் கிழித்துக் கையில் கொடுத்து அனுப்பிட்டார். எங்கப்பா ஹெட்மாஸ்டர்கிட்டே கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால், சர்டிபிகேட்ல எதுவும் குறிப்பிடாமல் கொடுத்தார். கலங்கிய கண்களும் பதறிய நெஞ்சுமாய் மதுரைக்குப் புறப்பட்டேன்.

*(சொல்றேன்)*

படங்கள் உதவி : **சஜோ**





பெரிதாகத் தொழில்நுட்ப அறிவு தேவையில்லை. கிரியேடிவிட்டிக்காக மூளையைக் கொஞ்சமும் திருக வேண்டாம். இறுதித் தேர்வுகளில் கூடை கூடையாக மதிப்பெண்கள் எடுத்திருக்கவும் தேவையில்லை. 'சூரிய வெளிச்சம் இத்தனை மணித்துளிகளில் பூமியை வந்து தொடுகிறது' என்பது போன்ற அறிவுக் கூர்மையும் அவசியமேயில்லை.

'ஹலோவ்வ்வ்... குட்மார்னிங் சார், வி யார் காலிங் ஃப்ரம்' என்று நாக்கைக் கொஞ்சம் அமெரிக்க பாணிக்கு சுழற்றியடிக்கத் தெரிந்திருக்க வேண்டும். சரளமாக ஆங்கிலம் பேச வேண்டும். அது போதும். உங்கள் வாழ்வின் மேன்மைக்கு. பெரிய சம்பளத்தைக் கண்ணில் காட்டி உங்களை அள்ளிக்கொண்டு விடுகின்றனர் கால்சென்டர் கம்பெனியினர்.

பி.இ., பி.டெக்., எம்.சி.ஏ., எம்.பி.ஏ. என்று மெத்தப் படித்தவர்களெல்லாமும் நுழையும் சுலப வாசலாக

# கால்சென்டர்...

அமைந்துவிடுகின்றன கால்சென்டர் கம்பெனிகள். இன்றைய தேதியில் மூன்றரை லட்சம் இளைஞர்கள் - இளைஞிகள் கால்சென்டரில் பணிபுரிந்து கை நிறைய சம்பாதிக்கிறார்கள். நாஸ்காம் கணிப்பின்படி 2008-ம் ஆண்டு இருபது லட்சம் இளைஞர்கள், அவர்களைக் கட்டி மேய்க்க மூன்று லட்சம் மேனேஜர்கள் இத்துறைக்குத் தேவைப்படுவார்கள். சென்ற வருடம் இத்துறை வாயிலாக இந்தியாவுக்கு 17 பில்லியன் டாலர் வருமானம் கிடைத்திருக்கிறது.

மற்ற எந்தத் துறையிலும் இல்லாத அளவுக்கு இரவு நேரங்களில் அதிகமானோர் கால்சென்டர் பணிகளில் ஈடுபடுகின்றனர். அதிலும் புரட்சிகரமாக, இந்தியாவிலேயே இரவு நேரங்களில் பெண்கள் அதிகமாகப் பணிபுரிவதும் இங்குதான்.

பணம் கொழிக்கும் துறையான இதில் பணியாற்றுவது வரம்தான் என்பது பலரின் கருத்தாக இருந்தாலும், சாபமோ என்று எண்ணும்விதமாக சமீப காலமாக வேறுவிதமான கூக்குரல்களும் எழுகின்றன. வேலை பார்ப்போரின் எதிர்காலம், மெக்கானிக்கலான வாழ்க்கை, நாள் முழுவதும் உட்கார்ந்து கொண்டே பணிபுரிவதால் ஏற்படும் உடல் உபாதைகள், நைட் - ஷிப்ட் இடர்ப்பாடுகள்... என்று சொர்க்க புரியாய் கண்ணுக்குத் தோற்றமளிக்கும் கால் சென்டர்களில் சமீபகாலமாக இடியாப்பச் சிக்கல்கள். இது குறித்து அங்கு பணிபுரிவோர் சிலரிடம் பேசினோம்.

"சூப்பர் ஃபீல்டு இது. நல்லா இங்கிலீஷ் பேசத் தெரிஞ்சா போதும். ஆரம்பச்

• சுந்தரி



• பாபு



• சாவியா





# வரமா? சாபமா?

சம்பளமே ஏழாயிரத்திலிருந்து பத்தாயிரம் வரை கிடைக்கும்'' என்று எடுத்ததுமே பாஸிட்டிவாகப் பேசிய சுந்தரி, பிரபல கால் சென்டர் ஒன்றில் பணிபுரிபவர். அடுத்தடுத்து குறைகளை அடுக்கினார்.

"நிறைய பேர் இந்த ஃபீல்டு மேலே நம்பிக்கையில்லாம வேற வேலைக்குப் போயிடறாங்க. இதனால நமக்கும் ஒருவித படபடப்பு ஏற்படுது. நிறைய உடல் உபாதைகள் வர்றதை ஒத்துக்கத்தான் வேண்டியிருக்கு. எதிர்காலத்துல என்ன ஆகுமோன்னு பயமா இருக்கு. அதேபோல இந்தத் தொழில்ல இந்திய விடுமுறைகளை அனுபவிக்கவே முடியாது. ஆயுத பூஜை, தீபாவளிக்குக் கூட லீவ் கிடைக்காது. ஆனா யு.எஸ்ல எதெதுக்கெல்லாம் லீவோ அதைத்தான் நாம அனுபவிக்க வேண்டியிருக்கு" என்றார்.

பாபுவின் அனுபவங்கள் வேறுபடுகின்றன. ''நாம யு.எஸ். கஸ்டமருக்குப் பேசுவோம். ரெண்டு பேருக்கும் யார், எங்கிருந்து பேசறாங்கன்னு தெரியாது. சில சமயம், ஒரு இந்தியன்தான் பேசறாங்கிறதை கண்டுபிடிச்சு 'யூ ப்ளடி இண்டியன்'னு திட்டினாலும் நாம சமர்த்தா இருந்துக்கணும். எக்காரணத்தைக் கொண்டும் கஸ்டமரை எதிர்த்துப் பேசவே கூடாது. நமக்கும் கஸ்டமருக்கும் நடக்கிற உரையாடல்கள் பெரும்பாலும் டேப் செய்யப்படும். இதனால ஒருவித அச்ச உணர்வு ஏற்படுது'' என்றார்.

பெண்கள் நைட்-ஷிப்டில் வேலை செய்வது பற்றி சாலியா கூறும் கருத்துகள் அதிரவைக்கின்றன. ''கால்செண்டர்ல வேலை பார்க்கிற பலருக்கும் தாங்கள் ஏதோ அமெரிக்கர்களாயிட்டோம்ங்கிற நினைப்பு உடனே வந்துடுது. வேலையில நாள் முழுக்க ஆங்கிலம் பேசறதால நிஜத்துலயும் தான் ஒரு இந்தியன்ங்கிறதை மறந்து அமெரிக்கனா உலவுறாங்க. இவங்களால நம்ம கலாசாரம் காத்துல பறக்க விடப்படுது. டாக்டர்கள் எல்லாம் நைட்-ஷிப்ட் செய்யாதீங்கன்னுதான் சொல்றாங்க. நைட் மாதிரி நிச்சயமா பகல்ல எந்தத் தொந்தரவுமில்லாம தூங்க முடியாது. நைட்-ஷிப்ட் வேலை பார்க்கிற பசங்க பலரும் தூக்கத்தைப் போக்கறதுக்காக புகைப் பிடிக்கிறாங்க. இதுல கொடுமை,

சமீபகாலமா பசங்களைப் பார்த்து பெண் களும் தம் அடிக்க ஆரம்பிச்சுட்டாங்க. அப்புறம் நான் முழுக்க ஹெட்போன் மாட்டி பேசறதால காது வலி வருது. மானிட்டரையே முறைச்சுப் பார்க்கறதால கண் வலியும் வருது. ஒரே ஹெட்போனை பல பேர் யூஸ் பண்றதால இன்ஃபெக்ஷன் வரவும் வாய்ப்பிருக்கு. இதுமாதிரியான சிக்கல்கள் போக, நிறைய பேருக்கு இந்தத் துறையில எப்படி எதிர்காலம் இருக்கும்னு ஒரு தெளிவு இல்லாததால ரொம்பவே தடுமாறுறாங்க" என்றார் படபடப்பாக.

இதற்கெல்லாம் கால்சென்டர்களின் பதில்தான் என்ன? பிரபல கால்சென்டர் ஒன்றின் மூத்த அதிகாரி, தம் பெயரைக் குறிப்பிடாமல் நம்மிடம் பேசினார்.

"கால்சென்டர் வளர்ச்சியினால் இன்றைக்கு உலகமே இந்தியாவை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்கிறது. நானெல்லாம் படித்து முடித்து வரும்போது உடனடியாக வேலை கிடைக்கும் என்கிற உத்திரவாதமில்லாமல் இருந்தது. ஆனா இன்னைக்கு கால்சென்டர்கள் இந்த நிலைமையையே மாற்றிவிட்டன. கல்லூரிப் படிப்பு முடித்தவுடன் எந்தவொரு பெரிய திறமையுமின்றி ஆங்கில அறிவை மட்டும் வைத்து யார் பத்தாயிரம் ரூபாய் சம்பளம் தருகிறார்கள்? இதனால் அந்த இளைஞனின் வாழ்க்கையில் பெரிய மாற்றம் ஏற்படுமல்லவா? மற்றபடி இந்தத் துறையின் எதிர்காலம் பற்றிய கவலையெல்லாம் வீண். வேறு எந்தத் துறையிலுமில்லாமல் இதில் மட்டும்தான் அடிமட்டத்திலிருந்து வெகுவிரைவில் டீம் லீடர், டீம் மேனேஜர் பொறுப்புக்கு வர முடியும்.

நைட்-ஷிப்ட் என்றாலே ஏதோ அபாயகரமானது என்கிற தோற்றத்தை உருவாக்குகிறார்கள். புதிதாக நைட்-ஷிப்ட்டில் வேலைக்கு வரும்போது முதல் மாதம்தான் சிறிது கடினமாக இருக்கும். அதற்கென்று தனியாக கவுன்சிலர் நியமித்து உடல் பாதிப்புகள் வராதவண்ணம் எப்படிப் பாதுகாப்பாக இருப்பது என்று ஆலோசனைகள் வழங்குகிறோம். நைட் ஷிப்டினால் உடல் பாதிப்புகள் ஏற்படும் என்கிறார்களே

• ஷாலினி



## "ஹார்மோன் பிரச்னை ஏற்படும்!"

கால்சென்டரில் இரவு நேரங்களில் பணிபுரிவதால் ஏற்படும் விளைவுகள் பற்றி நம்மிடம் பேசினார் மனநல மருத்துவர் ஷாலினி :

"நம் உடலில் *Biological Clock* என்று ஒன்று உள்ளது. இத்தனை மணி நேரம் தூங்க வேண்டும், இத்தனை மணி நேரம் விழித்திருக்க வேண்டும் என்று அது தனக்குள்ளாகவே ஒரு கணக்கு வைத்திருக்கும். இதில் மாற்றங்கள் ஏற்படும் போது பாதிப்புகள் ஏற்படுகின்றன. தூக்க நேரங்களை மாற்றும்பொழுது உடலால் உடனடியாக அதை மாற்றிக்கொள்ள முடியாது. பலவீனம் ஏற்படும். வயிற்றில் Acid தோன்றி அல்சர் வரும். மனத்தில் எரிச்சல் ஏற்பட்டு சகிப்புத்தன்மை குறைய நேரிடும். மனச்சோர்வு, ஞாபகக் குறைவு, கோபங்கள் போன்றவையும் ஏற்படும். அதே போல் கை நிறைய சம்பளம், அதிக சுதந்

தவிர. அதற்கான ஆதாரங்கள் எதுவும் கிடையாது. இன்றைக்கு நாட்டில் பெரும்பாலான வேலைகள் டெஸ்க் வொர்க் தான். மற்ற தொழிலில் என்னென்ன பிரச்னைகள் ஏற்படுமோ, அதேதான் இதிலும் ஏற்படும். அதேபோல ஏதோ கால்சென்டர்களில் மட்டும் க்ரியேட்டிவிட்டி கிடையாது என்பதும் தவறு. இத்தொழிலில் ஈடுபடுபவர்கள் அற்புதமான கம்யூனிகேஷன் திறமையை வளர்த்துக் கொள்கிறார்கள். இன்றைய தேதியில் நைட்ஷிப்ட் வருபவர்களில் ஐம்பது சதவிகிதத்தினர் பெண்கள். தகுந்த பாதுகாப்பும் தேவையான உணவும் கம்பெனிகளில் அவர்களுக்கு வழங்கப்படுகிறது. ஆக, கால்சென்டர்கள் மீது திணிக்கப்படும் குற்றச்சாட்டுகள் எல்லாமே பொய்யானவை'' என்று நீண்ட விளக்கமளித்தார்.

- ச.ந.கண்ணன்

திரம், சொந்த வீடு போன்றவற்றை இருபத்தைந்து வயதுக்குள் அனுபவித்து விடுவதால் வாழ்க்கையில் ஒரு சலிப்புத்தன்மை ஏற்பட வாய்ப்புண்டு. இதற்கு மேல் சம்பாதித்து என்ன செய்யப் போகிறோம் என்கிற தேக்க நிலை உருவாகும்.

நம் உடலில் அதிகாலை இரண்டு மணி முதல் ஆறு வரை அதாவது, ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் பொழுது ஹார்மோன்கள் உற்பத்தியாகும். அந்தச் சமயத்தில் கொட்ட கொட்ட முழித்துக்கொண்டு வேலை செய்தால் ஹார்மோன்கள் உற்பத்தியாகாது.

தொடர்ச்சியாக இதே மாதிரி முழித்துக் கொண்டிருந்தால் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஹார்மோன் ரீதியான கோளாறுகள் ஏற்பட வாய்ப்புள்ளது. ஆண்மைக் குறைவு ஏற்படவும் வழிவகுக்கலாம். பெண்களுக்கு கருமுட்டை உருவாவதில் சிக்கல் ஏற்படலாம்.



# சென்னைக்கு ஜே!

**பச்சன்:**

"ஒரு கலைஞன் உழைச்சுக்கிட்டே இருக்கணும். கலைக்கு எல்லை கிடையாது. என்னைக்கு நான் திருப்தி அடையறேனோ அதுக்கு மேல நான் நடிக்கவே மாட்டேன். ஆனால் ஒரு கலைஞன் என்னைக்கும் திருப்தியடையவே மாட்டான். தொடர்ந்து ஏதாவது சுத்துக்கிட்டேதான் இருப்பான். என் உடம்புல சக்தி இருக்குற வரைக்கும் என் கதவுகள் திறந்தேதான் இருக்கும்." சொல்லுறது இந்தியாவின் சூப்பர் ஸ்டார் அமிதாப் பச்சன். அவரைப் பற்றி அணு அணுவா ரசிச்சு தெரிஞ்சுக்க ஒரு தளத்தை நேர்ந்து விட்டுருக்காங்க. www. amitabhbachchan. net.

**டௌன்லோட்:**

நாமளும் ஒரு ஆடு, மாடு, கோழி, டினோசர், அனகோண்டா இப்படி எதையாவது வீட்டுல செல்லப் பிராணியா வளர்க்கலாமேன்னு எல்லார் மனசுலயும் ஓரத்துல ஒரு ஆசை ஒட்டிக்கிட்டு இருக்கும். அதை என்னைக்காவது வெளிப்படுத்துனோம்னா 'வீட்டுல உன்னைய வளர்க்குறதே பெருசு... சும்மாக்கிட சோம்பேறி'ன்னு எதிர்ப்பு வந்து விழும். உங்க மனக்குறையைப் போக்க www.goldfiles.com/freeware/desktop_pets.php உதவுது. ஆடு, பூனை, நரி, மிஸ்டர் பீன் இப்படி நீங்க டெஸ்க்டாப்ல வெச்சு வளர்க்க நிறைய அயிட்டங்கள் கிடைக்குது. அதுலயும் அந்த இ-ஆடு இருக்கே, செம லூட்டி பண்ணுது. ஆனா நாம நம்ம வேலையைப் பார்த்துக்கிட்டே இருக்கலாம். அது பாட்டுக்கு டெஸ்க்டாப்ல உலாவிக்கிட்டு ஏதாவது ஃபைலை மேய்ஞ்சுக்கிட்டு கிடக்கும்.




**வலைப்பதிவு:**

பெங்களூரில் நடக்கும் புத்தகக் கண்காட்சிக்குச் சென்றிருந்தேன். பல மொழிகளிலும் புத்தகம் வெளியிடுபவர்கள் வந்திருந்தனர். ஆனால், ஆங்கிலம் தான் அதிகமாகக் கண்ணுக்குப் பட்டது. கிட்டத்தட்ட 70% ஆங்கிலப் புத்தகங்களை விற்பவர்கள் என்று அனுமானிக்கிறேன். கன்னடப் புத்தக விற்பனையாளர்களைவிடத் தமிழ்ப் புத்தக விற்பனையாளர்கள் அதிகமாகக் காட்சியளித்தது ஆச்சரியத்தை வரவழைத்தது. மலையாளத்தில் டி.சி. புக்ஸ் மட்டும் தான் கண்ணில் பட்டார்கள். தெலுங்குப் புத்தக விற்பனையாளர்கள் நான்கைந்து பேர் இருக்கலாம் என நினைக்கிறேன். சில ஹிந்தி புத்தக விற்பனையாளர்களும் உண்டு. தமிழ்ப் புத்தகங்கள் கன்னடப் புத்தகங்களைவிட அதிகமாக விற்பனையாவதாகக் கேள்விப்பட்டேன். என் கணிப்பின்படி சென்னையில் வரும் கூட்டத்தில் ஐந்தில் ஒரு பங்குகூட பெங்களூர் கண்காட்சிக்கு வருவதில்லை. (http://thoughtsintamil.blogspot.com வலைப்பதிவிலிருந்து)

- வலைஞன்

## கங்குலி Vs சேப்பல்

# எங்கே செல்லும் இந்த மோதல்?

"இந்திய கிரிக்கெட் வரலாற்றில் இப்படியெல்லாம் இதற்குமுன் நடந்திருக்குமா?'' என்று வெளிநாட்டு மக்கடை பெஞ்சில்கூட விவாதம் பண்ண ஆரம்பித்து விட்டார்கள்.

"இந்திய கிரிக்கெட்டில் ஏற்பட்டிருக்கும் குழப்பம் மற்ற நாடுகளை ரொம்பவே குஷிப்படுத்தும். நாங்கள் உட்பட அனைவரும் இச்சந்தர்ப்பத்தை பயன்படுத்த உள்ளோம்'' என்று வெளிப்படையாகப் பேசியிருக்கிறார் தென் ஆப்பிரிக்க அணியின் விக்கெட் கீப்பர் மார்க் பவுச்சர்.

"சவுரவ் கங்குலிக்கும் தனக்குமிடையே நடக்கும் புகைச்சல்களை க்ரேக் சேப்பல் இப்பொழுதாவது அறிவிக்க வேண்டும். இல்லாவிட்டால் நிலைமை மேலும் விபரீதமாக வாய்ப்புள்ளது'' என்று கர்ஜிக்கிறார் நவ்ஜோத்சிங் சித்து.

விஷயம் இதுதான்... கங்குலிக்கு இந்திய ஒருநாள் அணியில் இனி இடமில்லை. டெஸ்ட் கேப்டன் பதவியும் பறிபோய்விட்டது. இது தொடர்பாக உருவான சம்பவங்களும் நேர்ந்த குழப்பங்களும் பல கேள்விகளை கிரிக்கெட் வட்டாரத்தில் எழுப்பியுள்ளன.

தன்னை அணியில் சேர்க்காததால் பல உள்ளடி வேலைகளில் கங்குலி ஈடுபடுகிறார் என்பது பொத்தம் பொதுவான குற்றச்சாட்டு. அதற்கான உதாரணங்களும் அடுக்கப்படுகின்றன.

- இந்திய கிரிக்கெட் அணியினர், வேகப்பந்து வீச்சுக்குச் சாதகமான பிட்ச்சுகளில் தடவுவார்கள். நம் ஊர் பல்கலைக்கழக விளாத்தாள்கள் அவுட்டாவதை விடவும் மிகச் சுலபமாக அவுட் ஆகிவிடுவார்கள். இந்நிலையில் 'எங்க ஊர் கங்குலியையா வெளியேத்துறீங்க' என்ற கடுப்பில் பெங்கால் கிரிக்கெட் அசோசியேஷன் தென் ஆப்பிரிக்காவுக்குச் சாதகமாக பிட்ச்சை உருவாக்கி கொல்கத்தா மேட்சில் இந்தியாவைக் கவிழ்த்து விட்டதாக ஒரு




• கங்குலி

குற்றச்சாட்டு.

● கங்குலி கொல்கத்தாவையே தனக்குப் பின்னால் திரட்டினார் என்பதற்கான ஆதாரங்கள் ஏராளம். பெங்கால் நடிகர் பட்டாளத்தை உள்ளடக்கிய 'ஆர்ட்டிஸ்ட் பாரம்' தேவையேயில்லாமல் இந்திய கிரிக்கெட் போர்டைக் கண்டித்திருக்கிறது. முன்னணி நடிகையான ரூபா கங்குலி, "பெங்கால் ரசிகர்கள் ஸ்டேடியத்துக்குச் செல்லக்கூடாது. நம் எதிர்ப்பை உலகத்துக்குக் காண்பிக்க வேண்டும்'' என்று கொம்பு சீவியுள்ளார். இதைவிட அபத்தம், மாநிலத்தின் ஊரக வளர்ச்சித் துறை அமைச்சர் அசோக் பட்டாச்சார்யா, ''கங்குலியை கொல்கத்தா மேட்ச்சில் சேர்க்காவிட்டால் மேட்ச்சை புறக்கணிப்பேன்'' என்று தன் பங்குக்கு மேலும் புகையைக் கிளறி விட்டிருக்கிறார்.

கங்குலியை அணியில் சேர்க்காததால் ஈடன் கார்டனில் நடந்த போட்டியில் பல அசௌகரியங்களையும் அவமானங்களையும் சந்தித்துள்ளதாம் இந்திய அணி. மேட்ச் நடந்த அன்று இந்திய அணிக்குச் சரியான சமயத்தில் மதிய உணவு வழங்கவில்லை என்கிறது சில செய்திகள். இதை நேரடியாக மறுக்காத ராகுல் டிராவிட், ''இந்திய மண்ணில் ஆடும்போது வெறும் நூற்றி எண்பத்தியெட்டு ரன்களுக்கு ஆட்டமிழந்தால் எப்படி சாப்பிடத் தோன்றும்'' என்று சமாளித்திருக்கிறார். இது தவிர பவுண்டரி லைன் ஓரத்தில் நின்றிருந்த அகர்கர், ஆர்.பி.சிங், இர்ஃபான் பதான் ஆகியோர் மீது வாய்வழித் தாக்குதல் நடத்தியிருக்கிறார்கள் ரசிகர்களில் ஒரு பிரிவினர்.

''நல்லவேளை நான் பவுண்டரி லைனில் நிற்கவில்லை. 1983-ம் ஆண்டுகளில் கவாஸ்கரையும் இதேபோல் வெறுப்பேற்றினார்கள். கொல்கத்தா ரசிகர்களின் பெருமை உலகம் அறிந்தது. ஏன் இப்படி நடந்து கொள்கிறார்கள்'' என்று மேலும் வருந்துகிறார் டிராவிட். இதைத் தொடர்ந்து கங்குலி அபிமானிகள் மீது சேப்பல் விரல்நீட்டி சவால் விடுத்த சம்பவம், எரிகிற நெருப்பில் ஊற்றப்பட்ட எண்ணெய். சேப்பல் பேருந்தில் ஏறும்பொழுது ரசிகர்கள் அவர்மீது கடுஞ்சொற்களை வீச, பதிலுக்கு ஒரு விரலைக் காண்பித்து அவருக்குத் தெரிந்த அர்த்தத்தில் பதிலளித்து ரசிகர்களை அவமானப்படுத்தியதாகக் குற்றச்சாட்டு. அடிபட்ட விரலைத்தான் காண்பித்தார் என்று மயிலிறகு தடவப்பட்டாலும் இந்த விஷயத்தில் யாருமே சேப்பலை ஆதரிப்பதாக இல்லை.

● க்ரேக் சேப்பல்



**'சேப்பல் தவறுகளை யாரும் சீந்துவதில்லை'**

குற்றச்சாட்டுகளை விடுத்து கங்குலி பக்கமுள்ள நியாயங்கள் என்னென்ன?

● கங்குலி 'நல்லொழுக்கம்' இல்லாதவராக இருந்திருந்தால் எப்படி அவரால் ஐந்து வருடங்கள் இந்திய கிரிக்கெட் அணியின் தி மோஸ்ட் சக்ஸஸ்ஃபுல் கேப்டனாக இருந்திருக்க முடியும்? சேப்பல் மீதான தவறுகளை ஏன் யாருமே சீந்துவதில்லை?

● ஈகோ எதுவும் பார்க்காமல், இந்திய அணியிலிருந்து கழற்றி விடப்பட்ட மறுநாளே ரஞ்சி, துலீப் டிராபி மேட்சுகளில் ஆடச் சென்றுவிட்டார் கங்குலி. இந்திய அணியில் எப்பாடு பட்டாவது இடம்பெற வேண்டும் என்கிற முயற்சியைப் பாராட்ட வேண்டாமா?

நவ்ஜோத்சிங் சித்து சொல்வதுபோல் க்ரேக் சேப்பல் தாமாக முன்வந்து உண்மைகளை வெளிப்படுத்தாவிட்டால், பஞ்சம் வைக்காமல் சர்ச்சைகள் தொடரும்; அது இந்திய கிரிக்கெட்டை தவறான பாதைக்குக் கொண்டு செல்லும் என்பது அனைத்து கிரிக்கெட் ஆர்வலர்களின் கணிப்பு.

- ச.ந.கண்ணன்

# உறையாத நினைவுகள்!

நவீன நாடகப் பரப்பில் நிஜமாகவே ஒரு புதிய பாய்ச்சல். அரவாணிகள் மட்டுமே கலைஞர்களாகப் பங்கேற்று நிகழ்த்திய 'உறையாத நினைவுகள்' எனும் நாடகம், சென்னை, கிண்டியில் உள்ள தமிழ்நாடு மாசுக் கட்டுப்பாட்டு வாரிய அலுவலக அரங்கில் நடந்தது. மொத்தம் ஒன்பது அரவாணிகள். ஒவ்வொருவரும் ஒன்றுக்கு மேற்பட்ட பாத்திரத்தில் மிளிர்ந்தனர். யாரும் நடிக்கவில்லை. வாழ்வில் அவர்கள் சந்தித்த வலி மிகுந்த புறக்கணிப்பையே கதையின் சம்பவங்களாகக் கோத்திருந்தார்கள்.

ஹார்மோன்களின் துரோகத்தால் உடலில் எப்போது மாற்றங்கள் தெரியத் தொடங்குகின்றன... பெற்றோரும், உடன்பிறந்தவர்களும் எப்போது புறக்கணிக்கத் தொடங்குகிறார்கள்... வீட்டைவிட்டு வெளியேறி நீண்ட அலைக்கழித்தலுக்கும், பாலியல் சுரண்டல்களுக்கும் ஆளாகி வஞ்சிக்கப்பட்டு நிற்கும்போது அரவாணிகள் தங்களுக்காக ஏற்படுத்திக்கொண்ட ஜமாத்தில் எப்படி அண்டி நிற்கிறார்கள்... அதன்பிறகும் விடாது துரத்தும் சமூகம் அவர்களை கேலிப் பொருளாகப் பார்ப்பதையும், ஏளனம் செய்வதையும் ரணமான வலியோடு நவீன கதையாடலின் வழியே கண்டிக்கிறது நாடகம்.

தமிழகத்தில் மட்டும் ஒரு லட்சத்து நாற்பதாயிரம் அரவாணிகள் வாழும் நிலையில், அவர்களுள் ஒரு சதவிகிதம் பேராவது பட்டம் பெற்று, கணிப்பொறி கற்று, தாங்களும் மனிதர்களாய் தங்கள் சொந்தக் காலில் நிற்கத் தொடங்கியிருப்பதோடு முடிகிறது நாடகம். இருகரம் நீட்டி 'எங்களை எங்களாக ஏற்கும் உலகம் இருந்தால்தான் இப்படி அலைக்கழிவதிலிருந்து எங்களுக்கு விடுதலை கிடைக்கும்' என்ற சக மனித அங்கீகாரத்தை மடிப்பிச்சைக் கேட்பது போன்ற தொனியில் அரவாணிகள் 'உறையாத நினைவுகளின்' வழியே உணர்த்துகிறார்கள். ஆண் தன்மை கொண்ட அரவாணிகளின் குரல் நாடகத்தில் குறைவாகவே பதிவாகி இருந்தாலும், அதைக் குறையென்று கூற முடியாது. ஆனால், சினிமா ஊடகம் தொடர்ந்து அவர்களை கேலிப் பொருளாகச் சித்தரிக்கும் அவலம் குறித்து நாடகத்தில் சின்னக் கிசுகிசுப்பு கூட இல்லாதது ஆச்சர்யம்.



• நாடகத்தில் ஒரு காட்சி...

எனினும், அரவாணிகளின் வாழ்வை அவர்களின் உடல், குரல் கொண்டே வெளிப்படுத்தியிருக்கும் இந்த நாடக முயற்சியின் பின்னணியில் இருக்கும் அ.மங்கை, சந்திரா, மீனா ஸ்வாமிநாதன், இன்குலாப், பொன்னி, ப்ரியா பாபு, பங்கேற்ற அரவாணிக் கலைஞர்கள் என அனைவரையும் எத்தனை பாராட்டினாலும் தகும்.

- ஜெய்

படம் : ஸ்ரீஹரி

# "நடிகர்கள் முதுகில் சவாரி செய்யாதீர்கள்..!"

கமலுக்கு அடுத்ததாகத் தமிழ் சினிமாவையும் அதன் ரசிகர்களையும் நேசிப்பதிலாகட்டும் சினிமாவில் சம்பாதித்த பணத்தை அதிலியே முதலீடு செய்வதிலாகட்டும் பிரகாஷ் ராஜ்க்கு நிகர் அவர்தான். 'அழகிய தீயே'வுக்குப் பிறகு தனது அடுத்த தயாரிப்பான 'கண்டநாள் முதல்' வெளியீட்டில் பரபரப்பாக இருந்தவரை பேட்டிக்காக சிறிது நேரம் மீட்டெடுத்தோம்.

**கடந்த பதினைந்து வருடங்களாக வில்லனாக நடித்துக் கொண்டிருப்பது உங்களுக்கு அலுப்பை உண்டாக்கவில்லையா?**

"'கில்லி' படத்தில் என்னை நீங்கள் வில்லனாகப் பார்க்கிறீர்கள். ஆனால் எனக்கது ஒரு கதா பாத்திரம். கதையின் நாயகியை, கதாநாயகனைவிட அதிகமாக நேசிக்கிற ஒரு பாத்திரமாகத்தான் எனது கேரக்டரை அதில் பார்த்தேன். ஹீரோவை எதிர்த்தால் அவன் வில்லன் என்று நீங்கள் எடுத்துக்கொண்டால், அது ரசிகர்களின் பார்வை. ஆனால் எனக்கது குணச்சித்திரம். 'எம். குமரனில்' நான் வில்லனா? 'வசூல்ராஜா'வில் நான் வில்லனா? 'அழகே'வில் வில்லனா? 'அறிந்தும் அறியாமலும்' படத்தில், 'அழகிய தீயே'வில் நான் வில்லனா? இப்போது 'சிவகாசி'யில்...? ஆமாம்! ஒரு கடைந்தெடுத்த வில்லன். ஒத்துக்கொள்கிறேன். ஆனால் நிஜ வாழ்க்கையில் உறவுகளுக்கு மத்தியில் சந்திக்கிற இரத்தமும் சதையுமான ஒரு வில்லன். வில்லன் என்றால், நான் கதாநாயகர்களோடு சண்டை போட்டுக் கொண்டே இருக்க வேண்டும். நான் ஃபைட் பண்ணியே ரொம்ப நாட்கள் ஆகிவிட்டன. பாலியல் பலாத்காரம் செய்கிறவன் வில்லன் என்றால், நான் எந்தப் படத்திலும் அப்படி நடிப்பதில்லை. இனியும் என்னை வில்லன் நடிகராகப் பார்க்காதீர்கள். உங்கள் உள்ளத்தின் உயரமான சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிற தரமான கலைஞனாகவே என்னை நான் பதிவு செய்துகொள்ள பயணம் செய்து கொண்டிருக்கிறேன்."

**ஒருபக்கம் சினிமாவில் ஈட்டியதை சினிமாவிலேயே முதலீடு செய்து ஒரு தயாரிப்பாளராகத் தரமான படங்களைத் தருவதற்கு சிரத்தை எடுக்கிறீர்கள். இன்னொரு பக்கம் ரசனையை மழுங்கடிக்கும் விதமாக வில்லன் பாத்திரங்களிலும் நீங்கள் நடிக்காமல் இல்லை. ஏன் இந்த முரண்பாடு?**

"நடிகன் பிரகாஷ்ராஜ் ஒரு என்டெர்டெயினர். தயாரிப்பாளர் பிரகாஷ் ராஜ் வேறுபல தாகங்கள் - தீர்மானங்கள் கொண்டவன். சினிமா நடிகனுடைய மீடியா அல்ல. அது இயக்குனரின், எழுத்தாளர்களின் மீடியா. சினிமா ஓர் ஓவியம் என்று வைத்துக்கொண்டால், அதில் ஒரே ஒரு வண்ணம் போலத்தான் நடிகன். இந்தப் புரிதலோடுதான் நான் நடிகனாக இயங்கிக்கொண்டிருக்கிறேன். இங்கே நான் மணிரத்னத்தின் பாத்திரமாகவும் மாறுகிறேன். கே.எஸ்.ரவிக்குமாரின் பாத்திரமாகவும் நடிக்கிறேன்.



இதைத் தாண்டி தென்னகத்தில் எந்த மாநிலத்துக்குப் போனாலும் வேறு மொழி, வேறு கதை, வேறு இயக்குனர் என்று இயங்குகிறபோது எனக்குக் கிடைக்கிற, நான் தேர்வு செய்கிற பாத்திரத்தைச் சரியாகச் செய்ய

# –இயக்குநர்களுக்கு பிரகாஷ்ராஜ் அட்வைஸ்

முடியுமா என்ற கேள்வியை மட்டும் கேட்டுக்கொண்டு, முடியும் என்றால் செய்கிறேன். இதில் தரமா, தரமில்லையா என்று நான் பார்ப்பதில்லை. நடிகன் என்பவனின் தேடலும் பயணமும் வேறு. நடிகன் பிரகாஷ்ராஜ் தன்னுடைய அடையாளத்தைக் கண்டுகொண்டு விட்டான்.

அவன் தயாரிப்பாளன் ஆனது வேறு காரணங்களுக்காக. அவனுக்குப் பிடித்த சினிமா வேறு. நான் புதியவர்களுக்கு வாய்ப்புக் கொடுக்கிறேன் என்பதை வைத்து என்னை ஏதோ ஒரு சினிமா ரட்சகன் போலச் சித்தரித்தால் அது தவறினும் பெரிய தவறு. என்னைப் பாதிக்கிற, என்னைத் தூக்கத்திலும் துரத்துகிற, நான் கவலைகொள்கிற விஷயங்களை யாரெல்லாம் சிந்திக்கிறார்களோ அவர்களை வைத்துப் படமெடுக்கிறேன். அதுபோன்ற ஆரோக்கியமான அறிமுகங்களை, எனக்கு அடையாளம் கொடுத்த தமிழ் ரசிகர்களுக்கு அடையாளம் காட்ட விரும்புகிறேன். நூற்று நாற்பது ரூபாயோடு சென்னையில் வந்து இறங்கிய என்னைக் கண்டுபிடித்து, உச்சிமுகந்து ஏற்றுக் கொண்டவன் தமிழனல்லவா... அவனுடைய வளர்ச்சியில் பங்குபெறுவது எனது கடமை அல்லவா? அதைத்தான் ஒரு தயாரிப்பாளராகச் செய்து கொண்டிருக்கிறேன். தயவுசெய்து இதற்காக என்னைப் பாராட்டி சங்கடப்படுத்தி விடாதீர்கள்.''

**நீங்கள் அறிமுகமான காலகட்டத்தில் இருந்த தமிழ் சினிமா... தற்போதைய தமிழ் சினிமா... என்ன வேறுபாட்டை உணர்கிறீர்கள்?**

''சினிமா இன்னமும் நடிகர்கள்

கையில்தான் இருக்கிறது என்பது, என்னால் ஜீரணிக்க முடியாத விஷயமாகத்தான் இருக்கிறது. ஒரு காலகட்டத்தில் பாலசந்தர், பாரதிராஜா, மகேந்திரன், ஸ்ரீதர் இப்படி இயக்குனர்களின் கையில் சினிமா இருந்த போதெல்லாம் ஆரோக்கியமான சினிமா வந்திருக்கிறது. ஆனால்



• விஜய்

## "முத்துலட்சுமியை சந்தித்ததில் ரகசியமில்லை!"

அவ்வப்போது இயக்குனர்களின் கையை விட்டுப் போய்விடுகிற மாயா ஜாலத்தை சினிமா நிகழ்த்தியபடி இருக்கிறது. இப்போதும் இளைய தலைமுறையில் சினிமாவை நேசிக்கிற, அதற்கு நேர்மையோடு இருக்க வேண்டும் என்று நினைக்கிற இயக்குனர்கள் வருகிறார்கள். ஆனால், அவர்கள் கைகோத்துக்கொண்டு ஒரு இயக்கமாகச் செயல்படுவதில்லை. வெவ்வேறு தனிப்பட்ட காரணங்களால் தங்கள் தனித்துவத்தை காவு கொடுத்துவிட்டு நடிகர்களின் முதுகில் சவாரி செய்யப் போய்விடுகிறார்கள். இந்த ஊசலாட்டம் தமிழில் மட்டுமல்ல... கன்னடம், தெலுங்கு, மலையாளம் எல்லா மொழிகளிலும். கடந்த பத்தாண்டுகளில் இதுதான் சாபக்கேடு! இதற்கு இயக்குனர்களை மட்டும் நான் குற்றம் சொல்ல மாட்டேன்."



• முத்துலட்சுமி

**அப்படியானால் தமிழ் ரசிகர்களின் ரசனையைச் சந்தேகப் படுகிறீர்களா?**

"அய்யோ! இது அபாண்டம். தமிழ் ரசிகர்கள் மட்டம் என்று தனியே பிரிக்க வேண்டிய அவசியமில்லை. ஒட்டுமொத்தமாக சினிமா ரசிகர்களைக் குற்றம் சாட்ட முடியாது. நல்ல படங்களையும் பார்க்கிறார்கள். குப்பை படங்களையும் பார்க்கிறார்கள். 'அழகிய தீயே'வும் பார்க்கிறான். அழுகிய படங்களையும் பார்க்கிறான். நீங்கள் கொடுங்கள். பொறுப்பு நமக்குத்தானே இருக்கிறது."

**ராம்கோபால் வர்மாவுடன் இணைந்து படம் தயாரிக்கப் போகிறீர்களாமே...**

"ஆமாம்! தமிழில் என்பதை தெளிவாக எழுதுங்கள். மணிரத்னத்தின் உதவியாளர் - மிலிந்த் படத்தை இயக்குகிறார்.

**விஜயை வைத்தும் நீங்கள் படம் தயாரிக்கப் போவதாகச் சொல்லப்படுகிறதே...**

"கேட்டதுமே ஒப்புக் கொண்டார். 'உங்களுக்குப் பண்ணாமல் வேறு யாருக்குப் பண்ணப் போறேன்' என்றார். என் மீது அவருக்கிருக்கும் அன்பும் நட்பும் ஆழமானது. பிரபுதேவா இயக்குனர் என்றேன். அதற்கும் ஒப்புக் கொண்டார். நல்ல கதைக்காக காத்துக் கொண்டிருக்கிறோம். இது மூன்று நண்பர்கள் சேர்ந்து தரும் நல்ல படமாக இருக்கும். அதைப் பற்றி இப்போது அநாவசியமாகப் பேசக்கூடாது."

**சமீபத்தில் சந்தன வீரப்பனின் மனைவி முத்துலட்சுமி உங்களை ரகசியமாகச் சந்தித்தாரா?**

"இதில் எந்த ரகசியமும் இல்லை. வீரப்பனின் வாழ்க்கையைப் படமாக எடுக்க வேண்டும். அதில் நீங்கள் நடிக்க வேண்டும் என்றார். நான் எனது முடிவைச் சொன்னேன். நான் அவரை வெறுக்கவும் இல்லை. மறக்கவும் இல்லை."

**- ஆர்.சி. ஜெயந்தன்**

படம்: **ஸ்ரீஹரி**

முழுமையான பேட்டிக்கு: Kalki@kalkiweekly.com

# பாலிவுட் கோவை சரளா!



கிளிப் பேச்சைக் கேட்கலாமா... கூடாதா? 'என் கிளி ரொம்ப விசுவாசமானது. எனக்குத் துரோகம் செய்யாது'ன்னு நம்பி, தன் புருஷனையே வீட்டை விட்டு வெளியேத்திட்டாங்க ஜெர்மனியில் ஒரு அம்மா. அவங்க பேரு பெட்ரா. பன்னிரண்டு வருஷமா ஒரு கிளியை வளர்த்துக்கிட்டு வராங்க. அவங்க புருஷன் பேரு ப்ராங்க். கிளி நல்லாப் பேசுமாம். திடீர்னு ஒரு நாள் தன்னோட பாசக்கார எசமானி அம்மாகிட்ட 'உதா உதா'ன்னு ஒரு பேரைச் சொல்லி கத்தியிருக்கு. உடனே பெட்ரா 'உதா'ன்னா யாரா இருக்கும்னு உஷாரா தேடிப் பார்த்ததுல, ஒரு உல்லாசப் பயணத்துக்காக 'ப்ராங்க், உதா'ன்னு ரெண்டு பேர்ல விமான டிக்கெட் இருந்துச்சாம். அப்புறமென்ன... 'எவயா அவ?'ன்னு சண்டை போட்டு, ப்ராங்குக்கு கெட்-அவுட் சொல்லிட்டாங்களாம் பெட்ரா. கிளி பண்ணுன 'கிலி'ல ப்ராங்க் வாழ்க்கையே கிழிஞ்சுடுச்சுங்கோ!

பதினாறு நாடுகள் சேர்ந்து பூமியில இருந்து 220 மைல் தூரத்துல ஒரு விண்வெளி ஆய்வுக்கூடத்தை வெச்சிருக்காங்க தெரியுமில்ல. அதுல வாழுற அமெரிக்க வீரரோட பேரு வில்லியம் ஆர்தர். பாவம், அவரும் எத்தனை நாளுதான் பிரபஞ்ச வெளியை வெறிச்சுப் பார்த்துட்டு இருப்பாரு. ஒரு என்டெர்டெய்ன்மெண்ட் வேண்டாமா? அதான் 'நாசா'ல இருந்து அவருக்கு 'ஹாரிபாட்டர் 4' படத்தை ஒளிபரப்புனாங்களாம். அவரும் கைதட்டி விசிலடிச்சு ரசிச்சுப் பார்த்தாராம் (இன்டர்வெல் உண்டா?). அப்படியே இப்ப வெற்றிகரமா ஓடிக்கிட்டிருக்குற 101% தமிழ் மசாலா படமான 'XXXX'ஐயும் போட்டுக் காண்பிங்க அவருக்கு. அதுக்கப்புறம் கண்டிப்பா பூமிக்குத் திரும்பி வரணுமான்னு யோசிக்க ஆரம்பிச்சுடுவாரு ஆர்தர்.

ரியாசென் தெரியுமில்ல... அதாங்க 'தாஜ்மஹால்' பட ஹீரோயின்... அவங்க போனவாரம் மும்பைல ஒரு திருமண நிச்சயதார்த்த நிகழ்ச்சில கலந்துக்கிட்டாங்களாம். ஃபங்ஷன் முடிஞ்சு 'பார்ட்டி' ஆரம்பிச்சது. செம டான்ஸாம்! (எல்லாருந்தான்!) போதை ஏறிப்போன ஒரு ஆளு, ரியாவைப் பார்த்து மேலும் கீழும் சில்மிஷம் பண்ணத் தொடங்கிட்டானாம். ச்சும்மா உடுவாங்களா ரியா... உங்க வீட்டு அடியா, எங்க வீட்டு அடியா... ஒரு காலனியே சேர்ந்து அடிக்கறாப்ல செம குத்துவிட, வலி தாங்காம கூட்டம் சேர்றதுக்கு முன்னாடி ஓடிட்டானாம் அவன். 'பொண்ணுங்ககிட்ட சில்மிஷம் பண்ண நெனைக்கறவன் எவனுக்கும் இந்தக் கதிதான்'ன்னு வீர ஸ்டேட்மெண்ட் உட்டாங்களாம் ரியா. 'பாலிவுட் கோவை சரளா'ன்னு ரியாவுக்கு ஒரு பட்டம் தரலாம்னு நெனைக்கிறேன். என்ன சொல்லுறீங்க!



நோபல் பரிசு விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ரத்தினச் சுருக்கமாக இப்படித் தான் பேசினார்...

"எனக்குத் தெரியாத விஷயங்களுடன் ஒப்பிடுகிறபோது, எனக்குத் தெரிந்த விஷயங்கள் ஒன்றுமே கிடையாது. கடற்கரையில் ஒரு சில கிளிஞ்சல்களைப் பொறுக்கிக் கொண்டிருக்கும் சிறுவன் போல நான் உணர்கிறேன். இவ்வுலகில் இன்னமும் கண்டுபிடிக்கப்படாத ஏராளமான விஷயங்கள், ஆழ்கடல் போல என் முன்னே விரிகின்றன"

ஆனால் மனிதர்களைப் பாருங்கள்... "எல்லாம் எனக்குத் தெரியும்! எனக்குத் தெரியாத விஷயம் இந்த உலகில் எதுவுமே கிடையாது!" என்று சொல்கிறவர்கள் இந்தச் சமுதாயத்தில் எத்தனை பேர் இருக்கிறார்கள்?

இவர்கள் அகங்காரத்தில் இப்படிச் சொல்லுவது போல மற்றவர்களுக்குத் தோன்றக்

# 18 நீங்கள்

கூடும். ஆனால் உண்மையில் அறியாமை காரணமாகத்தான் அவர்கள் பேச்சில் 'எல்லாம் அறிந்த' தொனி வருகிறது. பகவத்கீதை சொற்பொழிவுக்கு வரும் ஆயிரக்கணக்கானவர்களிடம், "நீங்கள் எதற்காக கீதைச் சொற்பொழிவுக்கு வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டுப் பாருங்கள்.

"எனக்கு பகவத்கீதையைப் பற்றி எதுவும் தெரியாது. எனவே, கீதையில் என்ன சொல்லியிருக்கிறது என்று தெரிந்துகொள்வதற்காக வந்திருக்கிறேன்" என்று வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறவர்கள் வெகு சிலர்தான் இருப்பார்கள்.

சிலர், "கீதை பற்றிப் பலரது சொற்பொழிவுகளை நான் கேட்டிருக்கிறேன். இவர்

சுனந்தாஜி

என்ன சொல்கிறார் என்று கேட்பதற்காக வந்தேன்" என்று கூடச் சொல்வார்கள்!

கல்வி பற்றிய மிகப் பிரபலமான ஒரு பொன்மொழி உண்டு. நீங்கள் எந்த ஒரு புதிய விஷயத்தைப் பற்றியாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்றால், நீங்கள் உங்கள் சுயகௌரவம் பாதிக்கப்படுவதை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராக இருக்க வேண்டும்.

பலருக்கும் அங்கேதான் பிரச்னை. தெரியாத ஒரு விஷயத்தை, "எனக்குத் தெரியாது" என்று வெளிப்படையாய் ஒப்புக்கொள்ள மனம் வருவதில்லை. எனவேதான், தனக்குத் தெரியாது போனாலும், அதை வெளியில் சொல்லாமல், அமைதியாக இருந்து, தனக்கு அதுபற்றித் தெரியும் என்பதுபோல ஒரு மாயையை ஏற்படுத்தி விடுகிறார்கள். நானும்கூட எல்லாம் தெரிந்த மனுஷி இல்லை. எனக்கு

• ஐன்ஸ்டீன்



# எந்த ரகம்?



• சாக்ரடீஸ்

உங்கள் முன்னால் பேசுவதற்கும் எழுதுவதற்கும் வாய்ப்பு தரப்பட்டிருக்கிறது. அதை நான் செய்து கொண்டிருக்கிறேன். "அம்மா! நீங்கள் பேசினதும் எழுதினதும் போதும்!" என்று சொல்லிவிட்டால், நான் வாயை மூடிக் கொண்டு சும்மா இருக்க வேண்டியதுதான்.

சில சமயங்களில் நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஒரு விஷயம் சரியா? தப்பா? என்று இரண்டு பேர் பந்தயம் கட்டுவார்கள். பெரும்பாலான நேரங்களில் விஷயம் தெரிந்த மனிதர் தனக்குத் தெரிந்தது ஒருவேளை தவறானதாக இருக்குமோ என்று பந்தயம் கட்டுவதற்குத் தயக்கம் காட்டுவார். ஆனால் சரியாக விஷயம் தெரியாதவர், தாம் சொல்லுவதுதான் நூற்றுக்கு நூறு சரி என்று அடித்துச் சொல்லி பந்தயம் கட்டுவார்!

அரேபியப் பழமொழி ஒன்று உண்டு. கேட்பதற்கு சுவாரஸ்யமாக இருக்கும். அதேசமயம் உலக நிலைமையை வெகு யதார்த்தமாகப் படம் பிடித்துக் காட்டும்.

விஷய ஞானம் உள்ள ஒருவர், தான் விஷய ஞானம் உள்ளவர் என்பதை அறிந்தவர்; அவர் அறிவாளி. அவரைப் பின்பற்றுங்கள்.

விஷய ஞானம் உள்ளவர்; ஆனால் தான் விஷய ஞானம் உள்ளவர் என்பதை அறியாதவர். அவர் தூங்கிக் கொண்டிருக்கும் மனிதர். அவரைத் தட்டி எழுப்புங்கள்.

விஷய ஞானம் இல்லாதவர்; அதேசமயம் தனக்கு ஞானமில்லை என்பதும் அவருக்குத் தெரியும். அவர் எளிமையான ஒரு மனிதர்; அவருக்கு விஷயங்களைக் கற்றுக் கொடுங்கள்.

விஷய ஞானம் இல்லாதவர்; ஆனால் தனக்கு விஷய ஞானம் இல்லை

என்பதே அவருக்குத் தெரியாது. அவர் ஒரு முட்டாள். அவரை விரட்டி விடுங்கள். அவருடன் பேசுவதோ, அவரது நிலைமையை அவருக்குப் புரிய வைக்க முயற்சி செய்வதோ வீண் வேலை.

மனிதர்களில் இப்படி நான்கு வகைப் பட்டவர்கள் உண்டு என்று எடுத்துக் காட்டுவதற்காக இந்த அரேபியப் பழமொழியைக் குறிப்பிட்டேன். உடனே நீங்கள் யாரும், இதனைத் தவறாகப் பயன்படுத்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

உங்களிடம் பேசுகிறபோது, யாராவது, "ஓ! அதுவா எனக்கு நன்றாகத் தெரியும்" என்று சொன்னால், உடனே, "உன்னைப் பற்றி எனக்குத் தெரியும்! உனக்கு விஷயம் தெரியாது என்பது மட்டுமில்லை: விஷயம் தெரியாது என்கிற விஷயம்கூட உனக்குத் தெரியாது. ஆனால் எல்லாம் தெரிந்தாற்போலப் பேசுவாய்! உண்மையில் நீ முட்டாள்! உன்னோடு பேசுவது வேஸ்ட்" என்று தயவுசெய்து கேலி பண்ணாதீர்கள். அப்புறம் எல்லோரும் 'ஊர் விட்டு ஊர் வந்து சொற்பொழிவு செய்கிறேன் என்று வேண்டாத விவகாரங்களை எல்லாம் கிளப்பி விடுகிறீர்களோ!' என்று என்னைப் பிடித்துக்கொண்டு விடுவார்கள்.

நீங்கள், இந்த நான்கு ரகங்களில் எந்த ரகத்தைச் சேர்ந்தவர் என்று சுயபரிசோதனை செய்து பார்த்துக்கொள்ள உதவியாக இருக்கும் என்பதால்தான் இதைச் சொன்னேன்.

எப்போதும் எதையும் தெரிந்துகொள்ளத் தயாராக இருங்கள்: புதிய கருத்துக்களை, விஷயங்களை திறந்த மனத்துடன் ஏற்பதற்குரிய மனப் பக்குவத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். கற்றுக் கொள்வதற்கு வயது ஒருபோதும் தடை இல்லை என்பதை மனத்தில் நிறுத்திக் கொள்ளுங்கள்.

கற்றுக் கொள்வதற்கு ஈகோ பார்க்காத வயது இளம் வயது. அதனால் தான் சிறுவயதில் எதைச்

### தேர்தலில் தோற்றாலும்...

மியூசிக் அகடமி தேர்தலுக்கு முன்னதாக நடுநிலைப் போக்கில் இரண்டு கட்டுரைகளையும் ஒரு வாசகர் கடிதத்தையும் வெளியிட்டிருந்தீர்கள். தேர்தலும் நடந்தது. நானும் திரு. முரளியும் அருகருகே நின்று அடுத்தடுத்து வாக்குப்பதிவு செய்தோம். வாக்கு எண்ணிக்கை முடிந்ததும் அவரை முதலில் வாழ்த்தியவன் நான். அவருடன் புகைப்படமும் எடுத்துக் கொண்டு என் ஒத்துழைப்பு எப்போதும் உண்டு என்றும் சொன்னேன்.

மியூசிக் அகடமியின் அனைத்து உறுப்பினர்களுக்கும் உடனடியாக நன்றிக் கடிதம் அனுப்பியவன் நான்.

## புள்ளி விழும் புலி!

கடந்த பத்து ஆண்டுகளில் இந்திய காடுகளில் வேட்டையாடப்பட்ட புலிகளின் எண்ணிக்கை மட்டும் 1500. ஒரு புலியின் இன்றைய மதிப்பு 60 லட்சம் ரூபாய். ஒரு புலித் தோலின் விலை 8.6 லட்சம் ரூபாய். புலியின் எலும்புகளைக்கூட பொடி செய்து மருந்தாகப் பயன்படுத்துகிறார்கள். கிட்டத்தட்ட நூறு விதமான சீன மருத்துவக் குறிப்புகளில் புலி எலும்புப்பொடி குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு கிலோ புலி எலும்பின் விலை 2.75 லட்சம் ரூபாய்.



திரு. முரளியை சிபாரிசு செய்திருந்த முக்கியஸ்தர்களில் ஒருவரான பிரபல வேளாண் விஞ்ஞானி டாக்டர் எம்.எஸ். ஸ்வாமிநாதன் அவர்கள் 'என் நன்றிக் கடிதம் முன் மாதிரியானது. அது எல்லோரும் பின்பற்ற வேண்டிய நாகரிகம்' என்று எழுதியிருந்தார்.

நிலைமை இப்படியிருக்க, மியூசிக் அகடமித் தேர்தலில் நான் திரு. முரளியின் வெற்றியை 'அபஸ்வரம்' என்று சொல்வது போலவும், அதற்காக மேடைக்கு என் முதுகைக் காட்டிக் கொண்டிருப்பது போலவும் 20.11.2005 இதழில் கார்ட்டூன் வெளியிட்டிருப்பது யதார்த்தத்துக்கு முரணானது. நான் தேர்தலில் தோற்றிருக்கலாம். ஆனால் பண்பில் தோற்கவில்லை என்பதை உணர்த்த விரும்புகிறேன்.

– நல்லி குப்புசாமி செட்டி,
சென்னை - 17

● கார்ட்டூன் சரியில்லை என்று கருதப்பட்ட போதிலும், அதன் விளைவாக நல்லி குப்புசாமி அவர்களின் இந்தக் கடிதம் கிடைக்கப் பெற்றதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். ஜனநாயகப் பண்பாடுகள் இதேபோல் இதர துறைகளிலும் பரவ இது முன்னுதாரணமாக அமையட்டும். நல்லி அவர்களுக்கும் முரளி அவர்களுக்கும் கல்கியின் வாழ்த்துக்கள்; பாராட்டுக்கள்

- ஆசிரியர்


● முரளி


● நல்லி குப்புசாமி

சொல்லிக் கொடுத்தாலும் அது உடனே அவர்களைச் சென்றடைந்து விடுகிறது. எனவே, சிறு வயதிலேயே, உங்கள் குழந்தைகளுக்கு ஏராளமான நல்ல விஷயங்களைக் கற்றுக் கொடுங்கள். அவர்கள் அந்த விஷயங்களை சுலபத்தில் ஏற்றுக்கொண்டு, வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்து, நல்ல பயனடைய வாய்ப்பு ஏற்படும்.

தவிர, வாழ்க்கையின் உண்மை என்ன என்று அறிந்து கொள்ளுவதிலும் ஈடுபாட்டை ஏற்படுத்தும். அந்த ஈடுபாடு, வாழ்க்கையில் தான் இருக்கும் நிலையிலிருந்து மேல்நோக்கி அழைத்துச்செல்லும்.

தத்துவஞானி சாக்ரடீஸ் பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டேன். மனிதர்கள் ஒவ்வொருவருமே வாழ்க்கையின் இயற்கையான உண்மை எது என்று புரிந்து கொண்டு தத்துவஞானி ஆக முடியும். தத்துவஞானி என்று நான் சொன்னவுடன் தயவுசெய்து மிரண்டு போய் விடாதீர்கள். தத்துவஞானிகள், சன்னியாசிகள் போல முற்றும் துறந்த முனிவர்களில்லை.

அதேநேரத்தில், சாமானியர்களுக்கும் தத்துவஞானிகளுக்கும் வித்தியாசம் இருக்கிறது.

அது என்ன?

சாமானிய மனிதனின் எண்ணங்கள், இந்த உலகில் இருக்கக்கூடிய லௌகீக விஷயங்களையே சுற்றிச் சுற்றி வருகிறது. இல்லாதவன், வேண்டும் என்று ஆசைப்படுகிறான்; கொஞ்சமாய் இருக்கப் பெற்றவன், அதிகம் கிடைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான். நிறைய கிடைக்கப் பெற்றவன், அதனை இன்னும் பல மடங்காகப் பெருக்குவதற்கு என்ன வழி என்று தேடிக்கொண்டிருக்கிறான்.

பெற்ற பிள்ளைகளை நிறைய செலவு செய்து படிக்க வைப்பதுகூட அவர்கள் பிற்காலத்தில் நல்ல வேலை பார்த்து, கை நிறைய சம்பாதித்து, தள்ளாத வயதில் நம்மை வைத்துக் காப்பாற்றுவார்கள் என்ற சின்ன எதிர்பார்ப்புடன்தானே!

இப்படி எதிர்பார்ப்புகளே இல்லாமல் மனிதனால் வாழவே முடியாதா?

யோசியுங்கள்.

(வெற்றி தொடரும்)

படம்: ஸ்ரீஹரி

# எம்.ஜி.கன்னியப்பன் கவிதைகள்

- சோறுபோடாத
மகனுக்கும்
வாய்த்து விடுகிறது
கொள்ளிபோடும்
உரிமை

- எரிமலைச் சிதறல்
ரசிக்கலாமெனினும்
கண்ணீராய் வழிந்தோடும்
சாம்பல் குழம்பில்
பூமியின் சோகம்
யாரறிவார்?

- தீபமாய் அசைந்தொளிரும்
மின்சாரச் சுடருக்குள்
ஒளியிருக்கும்
அகல் விளக்கின்
சுடரைப் போல்
உயிரிருக்குமா?

- மூங்கில் மரம் கொண்டு
அடுப்பெரிக்கிறாள்
இசைஞானமில்லாத அம்மா

பச்சை மூங்கில்
காய்கிற வேளை
அக்காவின் ஞாபகம்

நிராசையில் இறப்போர்
எரிவதில்லையாம் முழுசும்

வெடிக்கிற தீப்பொறியும்
கொதிக்கிற சாதமும்
வெப்பத்தின் காரணமாக
மட்டுமல்ல...

மரமெரிந்த அடுப்பில்
சாம்பல்
அள்ளிப் பார்க்கையில்
கையில் தட்டுப்படும்
எரியாத சில
முட்டுக்கள்

- மின்சாரக் கம்பியில்
அடிபட்டுப் பொசுங்கிய
காக்கையின்
வாயில் இரை
குழந்தைகளுக்குக்
கொண்டு செல்கையில்
நேர்ந்திருக்கலாம்
இந்தக் கோர விபத்து

- பரம்பரை வீடு
கைமாறும் வேளையில்
கடைசியாய் இடும்
கையெழுத்து எரிக்கும்
வம்சத்தை

ஓவியம்: அனந்தபத்மநாபன்

## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 7

இரவு ஒன்பது மணியிருக்கும். வானத்தில் கருமேகங்கள் சூழ்ந்திருந்தன. சிறு தூற்றல் போட்டுக் கொண்டிருந்தது. மூடிபோட்ட வீதி விளக்குகளின் மங்கலான வெளிச்சத்தைப் பார்க்கும்போது வானம் ஏதோ சொல்ல முடியாத துயரத்துடன் கண்ணீர் விடுவது போல் தோன்றியது.

இந்தக் காட்சியைப் பார்க்கச் சகியாமல் வீட்டுக்குள்ளே வந்தேன். என் உள்ளமும் சோர்வினால் பீடிக்கப்பட்டிருந்தது. இருட்டடிப்பு உபத்திரவத்தை முன்னிட்டு ஜன்னல் கதவுகளையெல்லாம் சாத்திவிட்டுப் பிரகாசமாக விளக்கைப் போட்டுக் கொண்டேன். மனத்திலுள்ள சோர்வை மாற்றுவதற்காகக் கதைப் புத்தகம் படிக்கலாமென்று ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டேன்.

சோர்வு, சோர்வு என்று சொல்லுகிறேன், அப்படி என்ன சோர்வு வந்தது என்று நேயர்கள் அறிய விரும்பலாம். சோர்வுக்குக் காரணங்களா இல்லை? உலக நிலைமையிலும் தேச நிலைமையிலும் மனச்சோர்வுக்கு வேண்டிய காரணங்கள் இருந்தன. போதாதற்கு அன்று சாயங்காலம் தினசரிப் பத்திரிகையில் வந்த ஒரு செய்தி மனத்தில் கொஞ்சம் நஞ்சம் இருந்த உற்சாகத்தையும் போக்கடித்து விட்டது.

அது, கடலூருக்கும் சிதம்பரத்துக்கும் இடையில் நேர்ந்த ரயில் விபத்தைப் பற்றிய செய்திதான். நேற்று ராத்திரி எழும்பூரிலிருந்து கிளம்பிய போட்மெயில், அங்கே பெரும் விபத்துக்கு உள்ளாயிற்று. காரணம் நன்றாகத் தெரியவில்லை. நகரில்



பலவித வதந்திகள் உலவின. திடீரென்று பெருகிய மழை வெள்ளத்தினால் தண்டவாளம் பெயர்ந்து விட்டதாக உத்தியோக முறையில் செய்தி. அந்த ரயிலில் பெரிய உத்தியோகஸ்தர் யாரோ போவதாகத் தெரிந்து தண்டவாளத்தை யாரோ வேண்டுமென்று பிடுங்கிப்போட்டதாக ஒரு வதந்தி. விபத்தில் செத்துப்போனவர்களின் கணக்கைப் பற்றி உலவிய வதந்திகளுக்கு அளவே இல்லை.

'நூறு பேர் செத்துப்போனார்கள், இருநூறுபேர் செத்துப்போனார்கள்' என்றெல்லாம் கேள்விப்பட்டபோது கூட என் மனம் அவ்வளவு கலங்கிவிடவில்லை. ஆனால், பத்திரிகையில், இறந்து போனவர்களின் பெயர்களை வரிசை வரிசையாகப் படித்து வந்தபோது அதிலும் ஒரு குறிப்பிட்ட பெயர் வந்ததும் - ரயில் வண்டி கவிழ்ந்து என் மேலேயே விழுந்தது போலிருந்தது.

வாசகர்களில் பலருக்கு ஐயம்பேட்டை கந்தப்பன் பெயர் ஞாபக





# வீணை பவானி

மிருக்கலாம். 'திருவழுந்தூர் சிவக் கொழுந்து' கதையை எனக்குச் சொன்ன தவுல் வித்வான் கந்தப்பன்தான். ரயில் விபத்தில் இறந்து போனவர்களின் ஜாபிதாவில் கந்தப்பப் பிள்ளையின் பெயரைப் பார்த்தவுடனேதான் எனக்கு அவ்வளவு மனவேதனை உண்டாயிற்று. அதென்னமோ பகவான் நம்மை அவ்விதம் படைத்து விட்டிருக்கிறார்.

'ஆஹா! ஐயம்பேட்டை கந்தப்பனுக்கு இந்த முடிவா ஏற்பட வேண்டும்? எப்பேர்ப்பட்ட மனுஷன்? என்ன தேச பக்தி? எத்தகைய நல்லொழுக்கம்? பழகியவர்களிடத்தில்தான் எவ்வளவு அபிமானம்? என்ன ரஸிகத்தனம்...?' என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போது, வாசலில் குதிரை வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. 'இந்த நேரத்தில் யார் வருகிறது?' என்று சிறிது வெறுப்புடன் எண்ணினேன். என் உள்ளம் அப்போதிருந்த நிலைமையில், யாரையாவது பார்ப்பதற்கோ, பேசுவதற்கோ பிடிக்கவில்லை.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம் வாசற் கதவு திறந்தது. அடால்ப் ஹிட்லரோ, ஜெனரல் டோஜோவோ வாசற்படியில் வந்து நின்றிருந்தால்கூட, எனக்கு அவ்வளவு திகைப்பு ஏற்பட்டிருக்காது. அங்கு நின்றவர் வேறு யாருமில்லை; ஐயம்பேட்டை கந்தப்பன்தான்.

''பயப்பட வேண்டாம்! நான்தான் வந்திருக்கிறேன். என்னுடைய ஆவி இல்லை'' என்று கந்தப்பனுடைய குரலைக் கேட்டதும், என்னுடைய திகைப்பு மாறி அளவிறந்த சந்தோஷம் உண்டாயிற்று.

''வாருங்கள்! வாருங்கள்!'' என்று அவருடைய கையைப் பிடித்து உள்ளே அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்தேன்.

''என்ன சேதி? என்ன சமாசாரம்? ரயில் விபத்திலிருந்து எப்படிப் பிழைத்து வந்தீர்கள்? இப்போதுதான் பத்திரிகையில் உங்கள் பெயரைப் படித்துவிட்டுக் கதிகலங்கிப் போனேன். அதெப்படி தப்புச் செய்தி அனுப்பினார்கள்? வெட்கக்கேடாக அல்லவா இருக்கிறது?'' என்று கேள்விகளை அடுக்கிக்கொண்டு போனேன்.

''நல்லவேளை; நான் போகவே இல்லை. நேற்று இரவு வண்டியில் எனக்கு ஸீட் ரிசர்வ் செய்திருந்தேன். தவுல் முதலிய சாமான்களையும் முன்னால் கொண்டுபோய் ஏற்றியாகிவிட்டது. நான் ஸ்டேஷனுக்கு வருவதில்தான் இரண்டு நிமிஷம் தாமதமாயிற்று. நல்ல காலந்தான்...''

''ரயிலில் உங்கள் பெயர் கட்டித் தொங்கியதாக்கும். அதையும் தவுலையும் பார்த்துவிட்டுப் பத்திரிகை நிருபர்கள் உங்களையும் சேர்த்து வைகுண்டத்துக்கு அனுப்பி விட்டார்கள் போலிருக்கிறது.''

''அப்படித்தான் இருக்க வேண்டும்.''

''உங்கள் வீட்டில் எல்லோரும் கவலைப்பட மாட்டார்களா? இன்றைக்கு ஏன் ஊருக்குப் போகவில்லை?'' என்று கேட்டேன்.

''ஊருக்குத் தந்தி கொடுத்து விட்டேன். உங்களைக் கொஞ்சம் பயமுறுத்தி விட்டுப் போகலாம் என்று வந்தேன்.''

''என்னையா பயமுறுத்தப் பார்த்தீர்



**அமரர் கல்கி**

கள்?"

"ஆமாம்; 'மகுடபதி' கதையில் வெறுமனையாவது பெரியண்ணனுடைய ஆவி வந்து நின்றதாகச் சொல்லி எங்களையெல்லாம் பயமுறுத்தினீர்களல்லவா? அதற்குப் பழிக்குப் பழியாக..."

"அதெல்லாம் கதையிலே நடக்கும். நிஜத்தில் நடக்குமா?" என்றேன்.

"நீங்கள் சொல்வது சுத்தத் தப்பு" என்றார் ஐயம்பேட்டை கந்தப்பன்.

"என்ன? அவ்வளவு கண்டிப்பாகச் சாப்புக் கொடுக்கிறீர்களே?"

"ஆமாம்; வாழ்க்கையில் அந்தமாதிரி நடந்திருக்கிறது."

"எந்த மாதிரி?"

"செத்துப் போனதாக நினைத்திருந்த மனுஷர் திடீரென்று தோன்றியதனால் ஆபத்து நேர்ந்திருக்கிறது."

"என்ன ஆபத்து?"

"உயிருக்கே ஆபத்து!"

ஏதோ ஒரு ரஸமான சம்பவத்தைச் சொல்லத்தான் ஐயம்பேட்டை கந்தப்பன் வந்திருக்கிறார் என்று அப்போது தெரிந்து கொண்டேன்.

"சொல்லுங்கள்; கேட்கிறேன். என் மனது இன்றைக்கெல்லாம் சரியாகவேயில்லை. ரொம்பவும் உற்சாகக் குறைவாயிருக்கிறது. உங்களுடைய கதையைக் கேட்டாலாவது..."

"என்னுடைய கதை உற்சாகந் தருவதல்ல; ரொம்பவும் சோகமானது. இன்னொரு நாளைக்கு வேண்டுமானால்..."

"கூடவே கூடாது. மனத்தில் உற்சாகமில்லாதபோதுதான் சோகக் கதை



கேட்க வேணும். சொல்லுங்கள்'' என்றேன்.

ஐயம்பேட்டை கந்தப்பப் பிள்ளை எப்போதும் ஒரு கேள்வியுடனேதான் கதையை ஆரம்பிப்பது வழக்கம். அவ்விதமே இப்போதும், தொண்டையைக் கனைத்துச் சரிப்படுத்திக்கொண்டு, "பூந்தோட்டம் பவானி என்று கேள்விப் பட்டதாக ஞாபகம் இருக்கிறதா?'' என்றார்.

அந்த மாதிரி ஒரு பெயர் ஏதோ பூர்வ ஜன்மத்தில் கேள்விப்பட்டது மாதிரி எனக்கு இலேசாக ஞாபகம் வந்தது. கிராமபோன் பிளேட் கூட ஒன்றிரண்டு கேட்டிருக்கும் நினைவு வந்தது. ஆனால், நான் ஞாபகப்படுத்திக் கொண்டு பதில் சொல்லும் வரையில் கந்தப்பப் பிள்ளை காத்திருக்கவில்லை. மேலும் சொல்லத் தொடங்கினார்.

"முப்பது வருஷத்துக்கு முன்னால் 'பூந்தோட்டம் பவானி' என்னும் பெயர் மிகவும் பிரசித்தமாயிருந்தது. 'வீணை பவானி' என்றும் சொல்வதுண்டு. வீணையை வைத்துக்கொண்டு பாடினாளானால், ஸரஸ்வதி தேவியே அவதாரம் எடுத்து வந்திருப்பதுபோல்தான் தோன்றும். அவளுடைய குரலுக்கு உபமானம் சொல்ல வேண்டுமானால், வீணைத் தந்தியை அவள் மீட்டும்போது



உண்டாகும் ரீங்கார நாதத்தைத் தான் சொல்லலாம். அந்த வீணைத் தந்தியின் ரீங்காரத்துக்கோ அவளு டைய குரலைத் தவிர வேறு உபமா னம் சொல்ல முடியாது. ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடியுள்ள சபைகளில் அவளுடைய கச்சேரி கள் நடப்பதுண்டு. நிசப்தமாயிருந்து கேட்பார்கள்; பரவசப்படுவார்கள். கோயில்களிலே - முக்கியமாகத் திருவாரூர் கோயில் - உற்சவ சமயங்களில் அவளுடைய கச்சேரி அடிக்கடி நடக்கும். இந்தக் காலத்தில் வரவர நாஸ்திகம் அதிக மாகி வருகிறது. சுயமரியாதை இயக் கம், அது இது என்று உலகமே கெட்டுப் போய் வருகிறது. போதா தற்கு சினிமா வேறு வந்து சேர்ந்து விட்டது. உற்சவங்களைச் சிரத்தை யாக நடத்துவோரும் இல்லை. அந்தக் காலத்தில் ஜனங்களுக்கெல் லாம் கோயில் திருவிழா - இம் மாதிரிக் காரியங்களிலேதான் கொண்டாட்டம். ஒரு கோயிலில் உற்சவம் என்றால், சுற்று வட்டா ரத்தில் இருபது மைல் தூரத்திலுள்ள ஜனங்கள் எல்லாம் திரண்டு வந்து விடுவார்கள்.

இப்படிப்பட்ட திருவிழாக் கூட் டத்தில் திருக்கல்யாண மண்ட பத்தில் சங்கீதக் கச்சேரிகள் நடக் கும். ஒவ்வொரு கச்சேரிக்குமே அபரிமிதமான கூட்டம் சேரும். அதிலும் பூந்தோட்டம் பவானியின் கச்சேரி என்றால் கேட்க வேண்டிய தில்லை. அந்தக் காலத்தில் பெரிய கூட்டத்துக்கு உதாரணம் சொல்ல வேண்டுமானால் 'பூந்தோட்டம் பவானியின் கச்சேரிக்குக் கூடுகிறாற் போல் கூடியிருக்கிறதே!' என்பார் கள். அப்படி ஜனக்கூட்டம் கூடியிருக்கும் இடத்தில் கசகசவென்று எவ்வளவு சந்தடியாயிருக்கும்? ஆனால், பவானியின் விரல்கள் வீணையின் தந்திகளைத் தொடவேண்டியதுதான்; முகத்தைச் சிறிது நிமிர்த்திக்கொண்டு அவளுடைய இனிய குரலைக் காட்டிச் சுருதி கூட்ட வேண்டியதுதான்; அவ் வளவு இரைச்சலும் ஒரு நொடியில் 'கப்' என்று அடங்கிவிடும்! இரைச்சல் ஓய் வதும், பவானியின் இனிய குரல் ஒலியும் வீணைத் தந்தியின் நாதமும் சேர்ந்து கிளம்புவதும், ஒரு இந்திர ஜாலம்போல் தோன்றும்.

பவானியின் கச்சேரி கேட்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தால், நான் அதை விடுவதில்லை. அத்தகைய சந்தர்ப்பங்கள் எனக்கு அடிக்கடி கிடைப்பதும் உண்டு. கல்யாணங்களிலோ, கோயில் உற்சவங் களிலோ பவானியின் கச்சேரிகள் நடக்கு மிடங்களில் நானும் என்னுடைய தொழிலுக்காகப் போய்ச் சேரும்படி அடிக்கடி நேரும். பவானியின் கச்சேரி கேட்டுக் கொண்டிருக்கும்போது, எனக்கு அடிக்கடி கண்ணில் ஜலம் வந்துவிடும். பக்கத்திலுள்ளவர்கள் பார்த்து பரிகசிக்கப் போகிறார்களே என்று ஏதோ தலை வலிக்கிற பாவனையாகத் தரையை நோக்கிக் குனிந்து கொள்வேன். கண்ணீருக்குக் காரணம் என்ன என்றா கேட்கிறீர்கள்? அதுதான் எனக்குத் தெரி யாது. ஆனந்தக் கண்ணீர்தானா? அல்லது இவ்வளவு அற்புதமான சங்கீதம் நீடித்து நிற்க வேண்டுமே என்ற அநுதாபத்தில் பெருகிய கண்ணீரா? ஜனங்கள் பேசிக் கொண்டு போவார்கள். 'இது எங்கேடா நிலைத்து நிற்கப் போகிறது? இப்படிப் பாடினால் உலகம் தாங்குமா?' என்று. சிலர் 'கண்திருஷ்டி படாமல் இருக்க வேண்டுமே!' என்று கவலைப்படுவார்கள்.

கச்சேரி முடிந்த பிறகு நான் பவானியைப் போய்ப் பார்ப்பேன். 'தங்கச்சி! அம்மாளை திருஷ்டி சுற்றிப் போடச் சொல்லு!' என்பேன். பவானியின் தாயாரும் பெண்ணை எத்தனையோ கண்ணும் கருத்துமாய்த்தான் காப்பாற்றி வந்தாள். ஆனாலும், கடைசியில் திருஷ்டி பட்டேவிட்டது.






பவானியின் தாயாருக்குப் பூந்தோட்டம் பிரஹதாம்பாள் என்று பெயர். அவள் பரம்பரையான பணக்காரி. அதோடு அவளுடைய குணத்திலும் பிரசித்தி பெற்றவள். ஒரு பெரிய மனிதரோடு மட்டும் சிநேகம் வைத்துக் கொண்டிருந்து, அவருக்கு உண்மையான தர்மப் பத்தினியாக நடந்து கொண்டிருந்தாள். அவன் காலஞ் சென்ற பிறகு அவள் பகவானுடைய பக்தியில் சிந்தையைச் செலுத்தி வந்தாள்.

தாயாருடைய சுபாவம் பெண்ணிடமும் இருந்தது. நெற்றியில் திவ்வியமாக விபூதியைப் பூசிக்கொண்டுதான் கச்சேரிக்கு வந்து உட்காருவாள். பக்தி ரஸமுள்ள பாட்டுக்களைத்தான் பாடுவாள். வீட்டிலே தினம் ஸ்நானம், பூஜை எல்லாம் பிரமாதமாக நடக்கும். இதனாலெல்லாம் பவானிக்கு ஞானப் பைத்தியம் பிடித்திருப்பதாகப் பலர் பேசினார்கள்.

பிரஹதாம்பாளுக்கு தன் பெண்ணை ஒரு யோக்கியமான நல்ல பிள்ளையாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமென்று விருப்பம். ஆனால் பவானியோ தான் ஆண்டாளைப் போல் கன்னியாகவே இருந்து கடவுளின் பாதத்தை அடையப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். இவர்கள் இரண்டு பேருடைய எண்ணமும் நிறைவேறவில்லை. எல்லாம் ஒரு மனுஷன் பராபரியாய் யாரிடமோ சொல்லிக்கொண்டு போன ஒரு வார்த்தையில் அடிபட்டுப் போய்விட்டது.

ஒரு தடவை திருவாரூர்க் கோயிலில் கச்சேரி செய்துவிட்டு பவானி வெளியே வந்து வண்டியில் ஏறிக்கொள்ளப் போகும் சமயத்தில், ஒரு மனுஷன் தன் சிநேகிதனுடன் பேசிக்கொண்டுபோன ஒரு வார்த்தை அவள் காதில் தற்செயலாக விழுந்தது. 'பாட்டு, பாட்டு என்கிறாயே பிரமாதமாய். பாட்டு இருக்கட்டும், அப்பா! அவள் முகத்திலே சொட்டுகிற களையைச் சொல்லு!' என்றான், அந்த மனுஷன். இதைக் கேட்டதும் பவானிக்குச் சிரிப்பு வந்தது. கலீரென்று சிரித்துவிட்டாள். யார் சிரிக்கிறதென்று அந்த மனுஷன் திரும்பிப் பார்க்கவே, பக்கத்தில் பவானி நிற்பதைக் கண்டு வெட்கிப் போனான். பவானியும் சட்டென்று வண்டியில் ஏறிக் கொண்டாள்.

விதி என்று சொல்லுகிறார்களே! இதுதான் விதி! அவ்வளவு கூட்டத்திற்கு நடுவிலே, இருட்டிலே அந்த மனுஷன் அந்த வார்த்தையைப் பவானி வண்டி ஏறுகிற இடத்திலே வந்து சொல்வானேன்? அது இவள் காதில் விழுவானேன்? பவானி வீட்டுக்குப் போனதும், அவள் தாயாரிடம், "அம்மா! நீ ஏன் இன்றைக்கு நான் கச்சேரிக்குப் போனபோது கைக்குட்டை வைக்கவில்லை?' என்று கேட்டாளாம். அவள் தாயார் 'இதென்ன கேள்வி?' என்று சும்மாயிருக்கவே, 'மண்டபத்தில் இறுக்கம் அசாத்தியம். ஓயாமல் வியர்த்துக் கொட்டிக் கொண்டே இருந்தது' என்றாளாம். அதோடு விடவில்லை. 'கேட்டுக்கோ, அம்மா! என் முகத்திலே வியர்வை கொட்டிக் கொண்டே இருந்ததா? அதைப் பார்த்துவிட்டு ஒரு மனுஷர் 'களை சொட்டுகிறது' என்று சொல்லிக்கொண்டு போனார் அம்மா!" என்று கூறி இடி இடியென்று சிரித்தாளாம். இதையெல்லாம் பவானியும் அவள் தாயாரும் எனக்கு அடிக்கடி சொல்வார்கள். இப்படி வேடிக்கையும் சிரிப்புமாக ஆரம்பித்த காரியம்தான் பிற்பாடு பெரிய வினையாக முடிந்தது.

(தொடரும்)

ராஜ் டீ.வியில் திங்கள் முதல் வெள்ளி வரை தினமும் இரவு ஒன்பது மணிக்கு ஒளிபரப்பாகி வரும் 'முந்தானை முடிச்சு' தொடரில் முதல் தலைமுறை கதை முடிவடைந்து, இரண்டாவது தலைமுறை கதை ஜெட் வேகத்தில் போகிறது. ஆனால், முதல் தலைமுறை நடிகர்கள் யாருக்கும் தலையில் கொஞ்சமாவது நரைத்திருக்கிறதா என்றால் இல்லை. இதைக் கவனிக்க வேண்டாமோ இயக்குநர்?

விஜய் டீ.வியில் பாதி நேரம் ஏதாவதொரு எண் கணிதவியல் நிபுணரோ அயல்நாட்டுப் பெண்மணியோ மூச்சு விடாமல் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். விளம்பரதாரர் நிகழ்ச்சிதான் என்றாலும் ஒரு அளவு வேண்டாமா? சன் டீ.வி முன்னணியில் ஓடிக் கொண்டிருக்கும்போது, திரும்பிப் பார்த்தால் ஒருவராவது நெருக்கத்தில் பின் தொடர வேண்டாமா?

என்.டி.டி.விக்குப் போட்டியாக சன் டீ.வியில் சுஹாசினி, குஷ்பு பிரச்னை பற்றிய விவாதம் ஸாரி, சண்டை நடந்தது. குஷ்புவுக்கு எதிரான கருத்துடையவர்கள் படையாகத் திரண்டு நிற்க, ஆதரவாக இரண்டே பேர் மட்டும். இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாம்.

ஒரு பிரபலத்தைப் பத்திரிகையில் பேட்டி எடுப்பதற்கும் டீ.வியில் எடுப்பதற்கும் வித்தியாசமே தெரிவதில்லை. பத்திரிகையில் பெரும்பாலும் ஆண் நிருபர்கள். டீ.வியில் ஜிகுஜிகு உடையணிந்த பெண் காம்பியர்கள். மற்றபடி அதே கேள்விகள், அதே பதில்கள். ஹிந்தி, ஆங்கில சேனல்கள்

சிறுவயதில் பள்ளி செல்லும்போது ஒரு வாட்டர்கேன் முழுக்கத் தேன் நிரப்பிச் சென்றிருப்பார் போல, "ஹலோவ்! யார்ங்க பேசறது? ச்சோ ஸ்வீட்... செல்லம்... டெடிகேஷன் யாருக்கு?" என்றெல்லாம் சன் மியூசிக் தொகுப்பாளினி காஞ்சன் வளைந்து, நெளிந்து, குழைந்து பேசும்பொழுது... காதில் இன்பத் தேனாறு!

சன் மியூசிக் காம்பியராகி பட்டிதொட்டியெல்லாம் பேர், புகழ் பெறவேண்டும் என ஆசைப்பட்டது காஞ்சனின் தோழிதானாம். ஆனால் துணைக்காகச் சென்ற காஞ்சனுக்குத்தான் பம்பர் லாட்டரி. தோழிக்கு மிஞ்சியது காஞ்சனின் ஆறுதல் மட்டும்.

சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த மதுரையிலிருந்து சென்னைக்குக் கிளம்பி வந்திருக்கும் காஞ்சனின் தாய்மொழி ஆங்கிலம். "அம்மா ஆங்கிலோ இண்டியன். அப்பா தமிழ். வீட்ல எல்லாம் ஒரே பீட்டரிங்தான்" கலகலவென தமிழில் சிரிக்கிறார். படிப்பு எம்.ஏ. மாஸ் கம்யூனிகேஷன். ஆனால் பேச்சில் 'ங்கா' மழலை மாறவில்லை. "குழந்தை மனசு உள்ளவங்க





# பிட்டா சில கொட்டு!

அப்படித்தாங்க பேசுவாங்க" என்றவர், நிகழ்ச்சிக்குத் தாவினார்.

"இப்போ நான் காம்பியரா இருந்தாலும் பெரிய ஜர்னலிஸ்டாகவோ, இல்லை விளம்பரப்பட இயக்குனராகவோதான் ஆசை. காம்பியரிங் கொஞ்ச நாள்ல போரடிச்சுடும். சில நேயர்கள் நிகழ்ச்சிக்கு போனை போட்டு 'யார் பேசறது கண்டுபிடிங்க'ன்னு கேட்கும்போது, டார்ச்சரா இருக்கும். போன்ல என்னங்க, முகமா தெரியுது?"

காஞ்சனுக்கு அழைப்பு விடுக்கும் நேயர்களுக்கு அடுத்து வரும் தகவல்கள் உதவும்.

இசை சம்பந்தப்பட்ட சேனலில் பணிபுரிந்தாலும் தமிழ் சினிமா பாடல்கள் பற்றிய அறிவில் இவர் பெரிய சைபர். அதுவும் அஸினின் இரு படங்கள் ஒரே சமயத்தில் ரிலீஸானதில் இவருக்கு மெகா குழப்பம். "ஆமா, 'ச்சீச்சீச்சிய்'னு ஒரு அஸின் பாட்டு இருக்கே... அது சிவகாசியா, மஜாவா?" என்று கேள்வி எழுப்புகிறார் பரிதாபமாக. போனால் போகட்டும் என்று 'எம்.குமரன் சன் ஆஃப் மகாலட்சுமி' எனத் தெளிவாகப் பதில் சொல்லிவிட்டு வந்தோம்.

# அஸினால் நேர்ந்த குழப்பம்!

விஷுவலாக பேட்டி எடுப்பது போல் தமிழில் காண முடியாதா?

**அ**ப்படியே ஜெயா 'ஜாக்பாட்'டின் மறுபிரதியாக இருக்கிறது சன் டீ.வியின் 'தங்க வேட்டை'. முதல் வார நிகழ்ச்சியைக் காணும்போது ரம்யா கிருஷ்ணனின் ஓயாத (என்ன கம்பீரமான குரல்!) சிரிப்பைத் தவிர, வேறெதுவும் பிரமாதமாக மனத்தில் ஒட்டவில்லை.

தொகுப்பு : **சநகன்**

படம் : **ஸ்ரீஹரி**

அமரர் கல்கியின் எழுத்துகளை ஆராய்ந்து பலர் புத்தகங்கள் எழுதியுள்ளார்கள் - யாவும் தமிழில். சமீபத்தில் ஓர் ஆராய்ச்சி நூல் வெளியாயிற்று ஆங்கிலத்தில்! Kalki and Scott - A comparision என்ற இப்புத்தகத்தை எழுதியவர் ஓய்வு பெற்ற ஆங்கிலப் பேராசிரியர் வி.என். சதாசிவ ராவ்.




• விழாவில்...

# அமரர் கல்கி பற்றிய ஆங்கில நூல்!

பேராசிரியர் அல்லவா... ஒரு பாடப் புத்தக அணுகுமுறையை மேற்கொண்டு, நாவல் இலக்கியத்தின் வரலாறு, சரித்திர நாவலின் இலக்கணங்கள் என்று தொட்டுச்சென்று பதினெட்டாம் நூற்றாண்டின் ஆங்கில நாவலாசிரியர் வால்டர் ஸ்காட்டின் படைப்புகளையும் அமரர் கல்கியின் வரலாற்று நாவல்களையும் ஒப்பீடு செய்துள்ளார்.

கடந்த நவம்பர் 11 அன்று இந்நூலின் வெளியீட்டு விழா சென்னையில் நடந்தது - ஹம்சத்வனி சபாவின் செயலாளர் ராமச்சந்திரன் தலைமையில். கல்கியின் தீவிர ரசிகர் என்பதால் விழாவுக்கான ஏற்பாடுகளைச் செய்ய ராவ் குடும்பத்தாருக்கு நிறைய உதவியிருந்தார் ராமச்சந்திரன்.

நூலை வெளியிட்ட கார்த்திக் நாராயணன், பொன்னியின் செல்வனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த தொழிலதிபர். முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டவர் அமுதசுரபி ஆசிரியர் திருப்பூர் கிருஷ்ணன்.

"பதினெட்டாம் நூற்றாண்டில், பிரிட்டனில் வாழ்ந்த ஸ்காட்டுக்கும் இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த கல்கி கிருஷ்ணமூர்த்திக்கும் ஏதோவொரு விட்டகுறை - தொட்டகுறை இருந்திருக்குமோ!" என்று வியந்து பேசினார் கார்த்திக் நாராயணன்.

நூலாசிரியரின் ஆய்வுக் கண்ணோட்டத்தையும் துல்லியமான அணுகுமுறையையும் பாராட்டிய திருப்பூர் கிருஷ்ணன், கல்கி போன்ற எழுத்தாளர்களைப் பற்றி நினைத்துப் பார்க்கிறபோதே நெஞ்சு நிறைவதைச் சுட்டிக் காட்டினார். இத்தகைய பெரியோரின் வாழ்க்கையைப் போலவே அவர்களுடைய படைப்புகளும் மனத்தை உற்சாகப்படுத்தி உயர்த்துகின்றன. இன்றைக்கு நவீன இலக்கியம், யதார்த்தம் என்கிற பெயரில் அவலங்களை அதிகமாய் அள்ளித்தர, மனத்தை மேம்படுத்தும் பணியை எழுத்தும் எழுத்தாளர்களும் புறக்கணிப்பது சரியானதா? ஆரோக்கியமானதா? என்றொரு சிந்தனையையும் முன் வைத்தார்!

கூட்டத்தில் யாரும் குறிப்பிடாத விஷயம்: கல்கி, ஸ்காட்டின் எழுத்துகளை விரும்பி ஆவலாகப் படித்தார். அதேபோன்ற சரித்திர நாவல்களை எழுத ஆசை கொண்டு வெற்றி பெற்றார்!

கடந்த ஏப்ரல் மாதம் முதல் சென்னை வானொலியில் சனிக்கிழமை தோறும் இரவு எட்டு மணிக்கு

# டிசம்பர் 5 - அமரர் கல்கி நினைவு தினம்

ஒலிபரப்பாகி வருகிறது அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்' நாடகம். பிரபல நடிகர்களான ஆர்.எஸ்.மனோகர், எம்.என்.ராஜம், வி.எஸ்.ராகவன் முதலானோர் இதில் பங்கேற்று வர நாடக வடிவம் கொடுத்திருக்கிறார் செ.ஆ. கிருஷ்ணமூர்த்தி.

''நான் 38 ஆண்டுகள் தலைமை ஆசிரியராகப் பணியாற்றி அண்மையில்தான் ஓய்வு பெற்றேன். கல்கியின் 'பொன்னியின் செல்வன்' நாவலை நாடகமாக்க எனக்கு அழைப்பு வந்தபோது, மிகவும் தயங்கினேன். கடல் போன்ற கல்கியின் வரலாற்றுச் சம்பவங்களை ஒரு குடுவையில் அடக்குவது என்னால் சாதாரணமா என்ன? 'பொன்னியின் செல்வன்' நாவலை கரைத்துக் குடித்து குறிப்புகள் எடுக்க மட்டுமே எனக்கு ஒரு வருட காலமானது.



• கிருஷ்ணமூர்த்தி

ஆர்.எஸ். மனோகர் என்னிடம், 'முன்பு எம்.ஜி.ஆர். பொன்னியின் செல்வன் நாவலின் உரிமையை வாங்கி நடிப்பதாக இருந்தார். ஆனால் கைகூடவில்லை. அதன்பின் கமல், மணிரத்னம் என எத்தனையோ பேர் முயன்றும் முடியாததை நீங்கள் செய்துவிட்டீர்கள்' என்று பாராட்டினார்.

பொன்னியின் செல்வனுக்கு உள்ளூரில் மட்டுமில்லாமல் வெளிநாடுகளிலிருந்தும் ஏகப்பட்ட பாராட்டுக் கடிதங்கள் வந்த வண்ணமுள்ளன. இந்த உற்சாகத்தில் அடுத்து 'பார்த்திபன் கனவு' நாவலையும் நாடகமாக்கி விட்டேன். வரும் பிப்ரவரி 2006 முதல் அது சென்னை வானொலியில் ஒலிபரப்பாக உள்ளது'' என்கிறார் கிருஷ்ணமூர்த்தி.

அமரர் கல்கியின் 'மோகினித் தீவு' நாவலை மேடை நாடகமாகத் தயாரித்திருப்பதோடு, இக்கதையின் நாயகி 'புவனமோகினி'யாகவும் நடித்திருக்கிறார் பிரபல சீரியல் நடிகை சாந்தி கணேஷ்.

''சமீபகாலமாக சரித்திர நாடகங்களை மேடையேற்ற யாருமே முன் வருவதில்லை. நாடகம் மூலமாக டி.வியிலும் சினிமாவிலும் நுழைந்த எனக்கு, இது மிகவும் சங்கடத்தையும் வருத்தத்தையும் அளித்தது. பூர்ணம் விஸ்வநாதன் ட்ரூப்பில் பலமுறை கல்கி அவர்களின் சரித்திரக் கதைகளில் நடித்த அனுபவமுள்ளதால், 'மோகினித் தீவு' சரித்திரக் கதையை மேடை நாடகமாகத் தயாரிக்க முன்வந்தேன். அதில் பெண் கதாபாத்திரத்துக்கு நடிக்க நிறைய வாய்ப்பிருந்ததால், நானே நடித்தேன். குமரேசனின் நாடகமாக்கம், வேலுச்சாமியின் இயக்கத்தில் 'மோகினித் தீவு' இரு மாதங்களுக்கு முன்பு அரங்கேற்றப்பட்டது. சினிமா, டி.வியைவிட மேடை நாடகம் மிகவும் கஷ்டமானது. சரித்திரக் கதை என்பதால் இருபது முறைக்கு மேல் ரிகர்சல் செய்த பிறகுதான் மேடையேறினோம். சென்னைக்குப் பிறகு இன்னும் பல ஊர்களுக்குச் சென்று நாடகம் போட்டு, இன்னமும் சரித்திர நாடகங்களுக்கு அழிவில்லை என்பதை உணர்த்தப் போகிறேன்'' என்றார் சாந்தி கணேஷ்.

தொகுப்பு:
**அலமு, செந்தில்**



• சாந்தி கணேஷ்

# பிரச்னையாகும் பெற்றோர்!

மனநல ஆலோசகர் பிருந்தா ஜெயராமன்

**மா**ப்பிள்ளையின் புகுந்த வீடு என்று சொல்லும்போது வீட்டோடு இருக்கும் மாப்பிள்ளைகளைக் குறிப்பதாக எண்ணிவிட வேண்டாம்! கொஞ்சம் கொஞ்சமாக மேலை நாட்டுக் கலாசாரத்தை நோக்கி நாம் நகர்ந்துகொண்டிருக்கிறோம். அந்தக் காலத்தில் மாமியாரைப் பார்த்து நடுங்கும் மாப்பிள்ளையைப் பற்றிய துணுக்குகள் அதிகம். எனக்குத் தெரிந்தவரை இப்போது மணம் செய்துகொள்ளும் பெண்கள்/மணமான பெண்கள் தங்கள் பிறந்த வீட்டுக்கும் புகுந்த வீட்டுக்கும் கணவன் சமமான அந்தஸ்தை அளிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

திருமணமான ராம்கி, மனைவி ஆர்த்தியின் வீட்டிற்கு உற்சாகமாகத்தான் போனார். ஆனால் பிசுபிசுத்த பட்டாசு மாதிரி உற்சாகம் குன்றித் திரும்ப வந்தார். அங்கே இவரது சகலை யாரையும் பேசவிடாமல் அறுவை ஜோக்குகளாக உதிர்த்ததைக்கூட ராம்கியால் சகித்துக்கொள்ள முடிந்தது. ஆனால், தன் மனைவி உள்பட எல்லோரும் அவரது அறுவைக்குச் சிரித்துப் பாராட்டியதுதான் தாங்க முடியாத எரிச்சலைத் தந்தது. 'புது மாப்பிள்ளைக்கான முக்கியத்துவம் பறிபோய்விட்டது; அதை மனைவியும் அனுமதித்தாள்'. இதுதான் பிரச்னைக்கான அடிப்படைக் காரணம். தொடர்ந்து, தனது புகுந்த வீட்டில் சகலை வந்தால் தான் வரப் போவதில்லை என்கிற அளவுக்கு ராம்கி மனைவியிடம் கோபப்பட, அவள் பதிலுக்குச் சட்டம் பேசினாள்.

'உங்க அக்கா புருஷனைக்கூடத்தான் எனக்குப் பிடிக்கலை. அவர் வந்தால் நான் வரமாட்டேன்னு சொன்னா நீங்க ஒத்துக்குவீங்களா?' என்று கேட்க ஆரம்பித்தாள். மாறாக கணவனுக்கு முக்கியத்துவம் கொடுக்கச் சொல்லி பெற்றோருக்குக் கோடி காட்டியிருக்கலாம். அல்லது தன் நடத்தையால் அவர்களுக்குப் புரிய வைத்திருக்கலாம்.

**சு**ப்புவின் பிரச்னை வேறு. அவர் மனைவி வனிதா, பெற்றோருக்குச் செல்லப் பெண்! அவளைப் பார்க்காமல் இருக்கவே முடியாது. அவள் தும்மினால்கூட ஆஜராகி விடுவார்கள். சுப்புவையும் அவரது பெற்றோரையுமே நன்றாகத்தான் நடத்தினார்கள். பாசத்தால் திக்குமுக்காடச் செய்தார்கள். ஆனால், இப்படி ஒரு பாசம் பிறந்த வீட்டில் இழுத்ததால், வனிதா மாமியார் வீட்டில் ஒட்டவேயில்லை. பக்குவமாக சமயம் பார்த்து வனிதாவின் பெற்றோரிடம் சுப்பு இது குறித்துப் பேச, அவர்கள் சற்று விலகி இருக்க ஆரம்பித்தார்கள். உறவுகள் ஆரோக்கியமாக இருந்ததால் இது



* படம்: யோகா

சாத்தியமாயிற்று.

ஷைலஜாவின் கதை இன்னொரு விதம். மகள் மருத்துவம் படித்து, இங்கிலாந்தில் வாழ்வதில் அளவிலா பெருமை அவள் பெற்றோ



ருக்கு. ஆனால் ஒவ்வொருமுறை போன் பேசும் போதும் குடும்பமே 'உன்னை ரொம்பவே 'மிஸ்' பண்ணுகிறோம்' என்று பாசம் காட்ட, ஆரம்பத்திலிருந்தே அழுதுகொண்டிருந்த ஷைலஜா இன்னும் தீவிரமடைந்தாள். போதாக் குறைக்கு குறைந்த கட்டணத்தில் கம்ப்யூட்டர் மூலமாகப் பேசும் வசதி வந்ததால், கணவன் வீட்டில் இருக்கும் நேரத்தில் கூட அவர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்தது தம்பதியரிடையே பிரச்னையைக் கிளப்பியது. ஷைலஜாவின் பெற்றோருக்கு ஏன் இது புரியவில்லை?

காலம் மாறியதால் எதிர்பார்ப்புகளும் மாறியிருக்கின்றன. மாப்பிள்ளையின் புகுந்த வீட்டாருக்கு - பெண்ணின் பெற்றோருக்கு ஒரு சில ஆலோ

சனைகள்...

● மணமாவதற்கு முன்பே மகளிடம் 'உன் மாமியார் வீடு இப்படி, அப்படி' என்றும், 'முதலிலேயே இடம் கொடுக்காதே... உன் தலையில் மிளகாய் அரைத்து விடுவார்கள்!' என்றும் போதனைகளை ஆரம்பிப்பது நல்ல உறவுக்கு இடம் கொடுக்காது. அங்கு போய் பெண்ணாகப் பார்த்துக் கணித்துக் கொள்ளட்டுமே!

● மணம் செய்து கொடுக்குமுன் மகளது படிப்பு, வேலை முதலியவற்றால் வீட்டுப் பராமரிப்பில் அவளுக்குப் பயிற்சி இல்லாது போகலாம். உள்ளூரில் இருக்கும் பெற்றோர், மகள் திண்டாடுகிறாள் என்றெண்ணி இட்லி மாவிலிருந்து அவளுக்கு 'சப்ளை' செய்ய ஆரம்பிக்க, அவளும் 'அப்பா - அம்மா இல்லாவிட்டால் நம்மால் சமாளிக்க முடியாது' என்று சார்ந்து வாழ ஆரம்பிக்க, மாப்பிள்ளைக்குத் தன் வீட்டு 'டைப்'பான சாப்பாடு கிடைக்காமல், 'மாமியார் கைப்பக்குவம்தான் என் தலையெழுத்து' என்று தோன்ற ஆரம்பித்து விடும்.

● மாப்பிள்ளையும் மகளும் புதுக் குடித்தனம் ஆரம்பிக்கிறார்கள். பெரியவர்கள் அவ்வப்போது போய் உதவுவது வழக்கம் என்றாலும் இந்தக் காலத்து இளம் தம்பதியரின் திறமையைக் குறைத்து எடைபோட வேண்டாம். பெரியவர்கள் எதற்கு அங்கே கொசுறாக? தங்களது எல்லைகளைச் சூட்சமமாகப் புரிந்துகொள்வது அவர்களுக்கு மரியாதையைக் கொடுக்கும்.

● 'உன் தந்தை ஏழையென்றால் அது உன் விதி; உன் மாமனார் ஏழையென்றால் அது உன் முட்டாள்தனம்' என்று நம்பும் மாப்பிள்ளைகள், மகளுக்காகப் பெற்றோர் செய்யச் செய்ய, மேலும் மேலும் எதிர்பார்க்க ஆரம்பிப்பார்கள். 'விரலுக்குத் தகுந்த வீக்கம்' என்பதை மகளும் புரிந்துகொள்ள வேண்டாமா? பெற்றோர் இதைத் தவிர்க்க வேண்டும்.

● வருந்தத்தக்க ஒரு நிகழ்வு - மாப்பிள்ளையும் அவரது பெற்றோரும் சேர்ந்து மருமகளைத் துன்புறுத்துவது. இதனை மகளின் பெற்றோர் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியாதுதான். ஆனால், தலையிட்டால் குழாயடிச் சண்டையாகிடும். மகள் தனியே போராட வேண்டிய போர் இது. அவள் மட்டுமே தீர்மானிக்க வேண்டிய விஷயம் இது. பெற்றோர் அவளுடைய மனபலத்தைக் கூட்டலாம். 'நீ என்ன தீர்மானித்தாலும் நாங்கள் பக்கபலமாக இருப்போம்' என்பது மாதிரி.

● இருபக்கத்து பெற்றோரும் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டியது: பிரச்னைகள் வரும்போது, அவற்றைத் திறமையாகக் கையாண்டு தீர்மானம் எடுக்க மகன்/மகளை நீங்கள் பழக்கியிருந்தால் அவர்கள் வாழ்க்கை அவர்கள் கையில்.

கல்யாண பந்தம் பற்றிப் பேசினோம்... இனி, காதல் தீயில் தவிப்பவர்களைப் பற்றி அடுத்து அவசியம் பேச வேண்டும்.

(பேசலாம்)

மாடல் படம்: ஸ்ரீஹரி



எழுத்தைத் தவிர ஓவியங்களிலும் அபார ஈடுபாடு காட்டிவருகிறார் எஸ். ராமகிருஷ்ணன். அவரின் எந்தப் படைப்புக்கான படமும் அவரின் பார்வைக்குப் பிறகே பிரசுரத்துக்குச் செல்லும்.


வாசகர்களின் எண்ணிக்கை
அதிகரித்த
ஒரே தமிழ் நாளிதழ்
தினமணி
செய்தியில் முழுமை; சொல்வதில் புதுமை!
அதிக வாசகர்கள்
படித்த
இணைப்புகள்
இளைஞர்மணி,
வெள்ளிமணி
Source: NRS 2005

மூங்கிலுக்குள் காற்றை
முத்தத்தால் இசைத்திட்ட
மூல முதல்வன் நான்!
மூங்கிலாம் மனிதனுக்குள்
உயிராம் காற்றை விதைத்திட்ட
இறைவன் நான்!

- ஸ்ரீகிருஷ்ணன்

அந்த மணிச் சத்தத்தை அனுராதா ஒரு சகுனச் செய்தியாகத்தான் பார்த்தாள். ''நீங்க முதன் முதலா இந்தப் பெட்டியைத் தொடும்போது மணி அடிக்குது... இட் ஈஸ் எ குட் டைம்...'' என்றாள். கணேஷோ அந்த ஏட்டுக்கட்டு, அழுக்கு நோட்டு இவற்றை நீட்டியபடியே ஒரு கேலிச் சிரிப்பு சிரித்தான். அப்படியே "கொஞ்சம் முற்போக்கான ஜர்னலிஸ்ட்டுன்னு நினைச்சேன். உங்களுக்குள்ளும் முட்டாள்தனமான பல நம்பிக்கைகள் இருக்கே...'' என்றான்.

அவள் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. சொல்லத் தெரியவில்லை. இப்படிப் பல சமயங்களில் பதில் சொல்லத் தெரியாத ஒரு சங்கடத்தை அவள் அனுபவித்திருக்கிறாள். அவ்வளவும் நம்பிக்கை சார்ந்த விஷயங்களில்தான் என்பதும் முக்கியமான ஒன்று. அப்படியே ஒரு ஓரமாக அமர்ந்து அவற்றை அக்கறையாகப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள். அப்படி அவள் படிக்கும் இடத்துக்குப் பக்கத்திலேயே கணேஷின் ஆடிட் செய்யப்பட்ட சில அக்கவுண்ட்ஸ் ஃபைல்கள். அதில் சில எண்களை ஓவல் போன்ற ஒரு வட்டத்துக்குள் அல்லது அந்த எண்ணைச் சுற்றி ஓவல் போன்ற ஒரு வட்டத்தைப் போட்டிருந்தான். சங்கிலிக்கண்ணி போல எல்லா



# எங்கே என் கண்ணன்?



அட்சரங்களும் பிரியாமல் சேர்ந்தே வேறு இருந்தன.

"மிஸ் அனுராதா... நீங்க இந்தக் குப்பை களைக் கிளறிக்கிட்டிருங்க. நான் புது க்ளையண்ட் ஒருத்தரைப் போய் பார்த்துட்டு வந்துடறேன். என் செல்போனை வெச்சிட்டுப் போறேன். என்னிடம் மிஸ்டர் சீனு போன் பண்ணலாம். அப்படிப் பண்ணா மூங்கில் பெட்டி, அப்புறம் அந்தக் கல்லு, பொம்மை எல்லாம் பத்திரமா இருக்கு, திரும்பி வரும்போது ஒரு நடை இந்தப் பக்கம் வந்து எடுத்துக்கிட்டுப் போங்கன்னு சொல்லிடுங்க. இல்லன்னா என்ன பண்றதுன்னு அவர் கிட்டேயே கேளுங்க. நான் வந்துடறேன்" என்று வேகமாக வெளியே கிளம்பினான்.

நிமிர்ந்துகூடப் பார்க்காமல் தலையை அசைத்தவளின் கவனமெல்லாம் ஏட்டுக் கட்டின் மேலேயே இருந்தது. சமஸ்கிருத எழுத்துக்கள் அவளுக்குப் புரியவில்லை. ஆனால் இந்தத் தலைமுறை என்பதால் ஹிந்தி படித்திருந்தாள். அது பல இடங்களில் உதவி செய்தது. அப்படியே நோட்டுக்குள் நுழைந்தாள். ஒரு குறிப்பிட்ட பக்கத்தில் சிட்டை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அவளுக்கு முன் சீனு அதுவரை படித்திருந்ததன் அடையாளம் அது. அதில் காலப்பிரமாணக் குறிப்புகள்தான் இருந்தன. அடுத்த பக்கத்தைப் புரட்டினாள். ஏற்கெனவே ஜோதிடரும் வாசித்து முடித்து அதிர்வுக்குள்ளான அந்தக் குறிப்பு அவள் கண்களிலும் பட்டது.

'இந்தக் குறிப்புகள் புண்ணியன் ஒருவன் கை சென்று, பின் ஜோதிடன் ஒருவன் கரத்தை அடைந்து, அவன் இதை வாசிக்கும் நாளில் இருந்து சொற்ப நாட்களில் இந்த புண்ணிய பூமிக்கு கண்ணன் வருவான். அவனை வரவேற்க நான் முன்செல்கிறேன். அதன் நிமித்தம் கங்கையில் ஜீவ சமாதியடைந்து என் பூத உடலை கங்கை மீன்களின் பசிக்கு இரையாக்குவதில் ஒரு வம்சத் தொடர்

இந்திரா செளந்தர்ராஜன் 19

புக்கே முற்றுப்புள்ளி வைக்கப்படும். உயிரில்லாத என் பிண்டம் மீன் உடம்பில் ஐக்கியமாகி அதன் உடம்பில் அடங்கிடும். மீனும் பரம்பொருளும் கிட்டத்தட்ட ஒன்று. அதை உணர்த்தவே அந்த பரந்தாமன் தன் அவதாரத்தை மச்சத்தில் தொடங்கினான்.

மனிதன் உயிர்வாழ ஐந்து அம்சங்களின் தயை வேண்டும். மீனுக்குத் தண்ணீர் ஒன்று போதும். இறைவனைப் போலவே அதுவும் என்றும் விழித்திருக்கும் ஒரு ஜீவன். இப்படி உடம்பை உதிர்த்து நான் முன்செல்வது கண்ணனை வரவேற்க மாத்திரமல்ல... கண்ணனின் வருகையை உத்தேசித்து நான் இந்தப் பூ உலகில் செய்து வைத்திருக்கும் ஏற்பாடுகளைக் கூறவும் தான்.

இந்தக் குறிப்புகளுடன் காணப்படும் ஏடு கிருஷ்ண தரிசனத்துக்காகவே வாழ்ந்த ஒரு மகா ஞானியின் கைகளால் எழுதப்பட்டது. சொப்பனத்தில் அவருக்குக் கிருஷ்ண தரிசனமும் கிட்டியது. அப்போது 'எல்லாமாய் நீ இருக்கிறாய்... பக்திக்கு வசப்படும் நீ, அதற்கு எதிரான வற்றுக்கும் வசப்பட்டாலன்றோ உன் கூற்று மெய்யாகும்' என்று அவர் கேட்க, 'பக்திக்கு மட்டுமின்றி அகங்கார மற்ற நேர்மைக்கும் வசப்படுபவன் நான்' என்று கிருஷ்ணனும் கூறினானாம்.

'இதை நீயே அடுத்து எடுக்கும் பிறப்பில் உணர்வாய்' என்றும் கிருஷ்ணன் கூறினானாம். 'ஐயோ, இன்னொரு பிறப்பா' என்று அவர் கேட்க, 'என்ன செய்ய, உன் கணக்கு அப்போதுதானே தீர்கிறது' என்று கிருஷ்ணன் கூறிச் சிரித்தானாம்.

அந்த மகான் தனது முக்தியின்போது கூறியபடி, நான் ஜீவித்திருக்கும் இந்தக் காலகட்டம் கிருஷ்ணனாகிய கண்ணன் வரப்போகிற ஒரு காலகட்டம். அந்த மகானும் மறு பிறப்பெடுத்திருக்கும் காலகட்டம்.

இதை எதிர்பார்த்துக் கிடந்த என் எண்ணங்களும் அலை அலையாகப் பரவி அங்கங்கே எவருக்குள் எல்லாம் புக வேண்டுமோ அவர்களுக்குள் எல்லாம் புகுந்து, அவர்கள் அனைவரும் கண்ணன் தோன்றி எழப்போகும் கங்கைக் கரையில் அணி திரளுவார்கள். அவர்களில் கன்னி ஒருத்தி நடப்பவற்றைக் காணப் போகும் சாட்சியாவாள். கண்ணனின்பால் காதல் கொண்ட சக்தி அம்சமான ராதையின் நாமம்கொண்ட அவளும் ஒரு மாலைப் பொழுதில் இந்த ஏட்டினை வாசித்து உள்ளுக்குள் உயிர்த்து எழுவாள்.

பசுவின் உடல் முழுக்க அதன் பால் பரவிக் கிடந்தாலும் மடியின் வழியாக அது வெளிப்படுதல் போலவே கண்ணனும் ஒரு சின்ன கூடைக்குள் உள்ள மரச் சிற்பம் ஒன்றைத் தொட்டு வரப்போகிறான். அவனோடு பேசுகிறவர் புண்ணியர்... அவனால் பார்க்கப்படுபவர்களும் புண்ணியர்... பெரும் புண்ணியர்...'

அந்தப் பக்கம் வளர்ந்து கொண்டே போனது. அடுத்த பக்கத்தைப் புரட்டினால் அது நீர் பட்டது போல அழிந்திருந்தது.

அனுராதாவுக்கு சுருக்கென்றது. அதுவரை படித்ததை ஒருவரின் டயரிக் குறிப்பு என்பதா, இல்லை கற்பனையான எழுத்துப் போக்கா...? அதில் உள்ள செய்திப்படி பார்த்தால் கிருஷ்ண தரிசனத்துக்காக உருகியவரும் கணேஷும் ஒன்றுபோலத் தெரிகிறது. அந்த ஏட்டிலுள்ள கையெழுத்தும், குறிப்பாக எண்களைக் குறிப்பிட்டு அவரும் ஓவல் போல வட்டம் போட்டிருந்தார்... சங்கிலி எழுத்துக்கள் ஒவ்வொரு வரி முடியும் போதும் சொல்லிவைத்த மாதிரி



வல்லிக்கண்ணன் தனது சுயசரிதையை எழுதிக் கொண்டிருக்கிறார். உடல்நலக்குறைவினால் புத்தகத்தை முடிப்பதில் தாமதம் ஏற்பட்டு வருகிறது. விரைவில் புத்தகம் வெளிவரும் என்று எதிர்பார்க்கலாம்.

எட்டுப் புள்ளிகள்... அதிலும் சரி, கணேஷின் ஃபைலிலும் சரி... இரண்டிலும் பாஷை தான் வேறு... அந்தக் குறிப்பில் ராதை என்று தன் பெயரும் இருப்பதையும் உணர்ந்தவள் அப்போது கழிந்தபடி இருப்பதும் ஒரு மாலைப் பொழுது தான் என்று உணரவும் ஒரு அமானுஷ்ய பரவசத்திற்குள் அப்படியே புதைந்து போனாள்.

இதெல்லாம் என்ன? கணேஷ் சற்று முன் கூறிச் சென்றதுபோல தன்னிச்சையான சம்பவங்களைப் புத்திதான் இப்படிப் பார்த்துப் பார்த்துப் பரவசப்படுகிறதா?

இல்லையே... வாசித்த விஷயத்திற்கும் நடந்த, நடக்கின்ற சம்பவங்களுக்கும் ஒரு அசாதாரண தொடர்பு இருக்கிறதே... இது எப்படித் தன்னிச்சையாகும்?

அப்போது அவனது செல்போன் அவள் கவனத்தைத் திருப்பியது. போய் காதைக் கொடுத்தாள். அந்தப் பக்கமாய் ஆடிட்டர் கிருஷ்ணமூர்த்தி அய்யர்.

"கணேஷ்..."

"அவர் இல்ல... நீங்க?"

"நான் அவரோட ஆடிட்டர் பேசறேன். நீங்க யார்?"

"நான் ஒரு ஜர்னலிஸ்ட். அவருடைய உதவியால அவரோட அறைல தங்கியிருக்கறவ. என் பேர் அனுராதா சார்... எனிதிங் இம்பார்ட்டன்ட் சார்."

"ஆமாம்மா... அவர் வந்தவுடன் எனக்கு கால் பண்ணச் சொல்லுங்க..."

"ஷ்யூர் சார்..." அனுராதா செல்லை முடக்கினாள். திரும்பவும் வாசற்புறம் சப்தம்.

குண்டுக்கட்டாக கணேஷை சுமந்து கொண்டு ஒருவன்...! அவன் நடந்து வரும் விதமே அப்படி ஒரு அழகு. முகத்தில்கூட அப்படி ஒரு ஈர்ப்பு. கோபிசந்தனத்தை ஒரு மஞ்சள் தீபச்சுடர் போல நெற்றியில் தரித்தபடி, சாதாரண வேட்டி சட்டையில் தென்பட்டவன் அனுராதாவுக்குள் ஒரு மின்னலை வெட்டினான்.

அவனோ கணேஷை அறைக்குள் இறக்கி ஒரு ஓரமாய் அமர்த்திவிட்டு, "இந்தச் சுளுக்கு குணமாக எப்படியும் ஒரு





வாரம் ஆகும் சார்... பேசாம ரெஸ்ட் எடுங்க" என்றான்.

அவன் சொன்னதிலேயே கணேஷை அவன் சுமந்து வந்ததன் காரணம் புரிந்துவிட்டது.

"அப்ப நான் போய்ட்டு வரேன் சார்..." - இதுவும் அவன்தான்.

"ரொம்ப ரொம்ப தேங்க்ஸ். அந்தப் பள்ளத்தைத் தாண்டிட முடியும்னு நம்பினது தப்பா போச்சு. நல்லவேளை விழுந்து எழுந்த என்னைத் தாங்கிப் பிடிச்சு இங்க வரை கொண்டு விட்டுட்டும் போய்ட்டீங்க. எகெய்ன் ரொம்ப தேங்க்ஸ்."

"தேங்க்ஸெல்லாம் இருக்கட்டும். நல்லா ரெஸ்ட் எடுங்க. ஏன்னா, இந்தச் சுளுக்கு பத்தி எனக்குத் தான் தெரியும்."

"நான் பாத்துக்கறேன்... ஆமா உங்க பேர்..."

"சுதாமன்."

- சொல்லிவிட்டு சில அடி சென்றவன், திரும்பி அந்த மூங்கில் பிரம்புப் பெட்டியைப் பார்த்தான். சட்டென்று கன்னத்தில் போட்டுக்கொண்டான். அதன் பின் விறுவிறுவென்று போய் விட்டான். அனுராதாவோ 'சுதாமன்' என்று அவன் சொன்ன பெயரிலேயே மையம் கொண்டிருந்தாள்.

(தொடரும்)



# “வெகுஜனப் பத்திரிகைகளிடம் கவனமாக இருக்க வேண்டும்!”

“‘ஸரஸ்வதி’யில் நானும் அவரும் ஒரே காலகட்டத்துலதான் கதையெழுத ஆரம்பிச்சோம். அப்ப ஆரம்பிச்ச பழக்கம். ‘ஒருமுறை அப்படி நாகர்கோவில் பக்கம் வாங்களேன், பாக்கலாம்’னார். அவ்ளோ தூரம் போறது அப்பல்லாம் சாதாரண விஷயமில்ல. அதனால ஸரஸ்வதி பத்திரிகை வேலையா திருநெல்வேலி போய் அங்க சில நண்பர்களைச் சேத்துக் கிட்டு சுந்தர ராமசாமி வீட்டுக்குப் போனேன்.

அவரோட வீட்ல இருந்த சூழலையும் வசதியையும் பார்த்துட்டு இவரெல்லாம் எதுக்குக் கதை எழுத வந்தார்னுதான் நினைச்சேன். நமக்குத்தான் வேற வழி யில்ல. எழுதினாத்தான் பொழப்பு ஓடும். என்னை மாதிரியே அவரோட வீட்லயும் ஒரு ஜீவன் நினைச்சது. அது வேற யாருமில்ல. சுந்தர ராமசாமியோட அப்பா தான்.”

- இப்படிப் பேசியவர் வேறு யாரு மல்ல... ஜெயகாந்தன்தான்.

இடம், ‘உயிர்மை’ இதழின் ஆசிரியரும் கவிஞருமான மனுஷ்யபுத்திரன் ஏற்பாடு செய்திருந்த ‘சொல்லின் கால்தடங்கள்’ என்ற தலைப்பிலான சுந்தர ராமசாமி நினைவரங்கில். தேவநேயப் பாவாணர் நூலக கட்டட அரங்கில் நடைபெற்ற இந்நிகழ்ச்சியில் ஜெயமோகன், எம்.யுவன், நாஞ்சில் நாடன், பிரபஞ்சன் உள்ளிட்டோருடன், மலையாளக் கவிஞர் கல்பற்றா நாராயணன், கூத்துப் பட்டறை ந. முத்துசாமி, இயக்குனர் பாலு மகேந்திரா முதலானோரும் கலந்துகொண் டனர். சுந்தர ராமசாமியைப் பற்றி ஜெயமோகன் எழுதிய ‘நினைவின் நதியில்’ என்னும் நூலை ஜெயகாந்தன் வெளியிட, பாலுமகேந்திரா பெற்றுக்கொண்டார்.



அழைப்பிதழில் குறிப்பிடப்பட்டு வராமல் போன இருவர், ஓவியர் ஆதிமூலம் மற்றும் தாமரை ஆசிரியர் சி. மகேந்திரன். அரை மணி நேரம் தாமதமாகத் தொடங்கினாலும் சரியான நேரத்துக்கு விழாவை முடித்தனர்.

“சுந்தர ராமசாமியும் ஜெயமோகனும் வெகுஜனப் பத்திரிகைகளோடு சமரசம் செய்து கொள்ளாதவர்கள். வெகுஜனப் பத்திரிகைகளிடம் ஜெயமோகன் போன்றோர் கவனமாக இருக்க வேண்டும்” என்று தன் பேச்சினிடையே ஜெயகாந்தன் குறிப்பிட்டதும் அரங்கில் சிரிப்பலை.

விழா முடிந்து திரும்பும்போது வாயிலில் ‘மாற்றுக் குரல்கள்’ அமைப்பைச் சேர்ந்தவர்கள் குஷ்புவுக்கு ஆதரவாகவும், திருமாவளவன் கட்சியைச் சேர்ந்தவர்களின் வன்முறைக்கு எதிராகவும் பிட் நோட்டீஸ் விநியோகித்தார்கள். திருமாவளவனுக்கு எதிராகக் குரல் கொடுக்கும் அந்த அமைப்பிலும் ஒரு திருமாவளவனின் பெயரைப் பார்க்க முடிந்தது. அந்த திருமாவளவன் ஒரு பேராசிரியராம்.

- கலாபாரதி

படம்: ஸ்ரீஹரி




# கல்யாணம் நடக்குமா?

அண்மையில் திரைக்கு வந்து, சத்தமில்லாமல் சாதனை படைத்துக் கொண்டிருக்கும் 'பெருக' படத்தின் மூலம் அடையாளத்துக்கு வந்திருக்கும் வில்லன் ஜெமினி பாலாஜி.

'ஏய்...!', 'டேய்!' என்று ரசிகர்களின் காது கிழிகிற மாதிரி கத்துவதுதான் தாதாவின் நடிப்பு என்றிருந்த நிலையில் பேட்டை தாதா 'கர்ணா' கேரக்டரில் எப்படி பாலாஜியால் இத்தனை யதார்த்தமாக நடிக்க முடிந்தது?

''கடைசி வரைக்கும் இயக்குனர் கதையே சொல்லலீங்க. படம் எடுக்க எடுக்கத்தான் இது அயோத்தியா குப்பம் வீரமணியோட வாழ்க்கைன்னு புரிஞ்சுது. க்ளைமாக்ஸ்லதான் 'பெருக' கேரக்டர் நம்மள கொல்லப் போகுதுன்னே தெரிய வந்துச்சு. கதை முன்னாடியே தெரிஞ்சிருந்தா ரொம்ப செயற்கையா நடிச்சிருப்பேன். இத்தனை பேர் கிடைச்சிருக்காது'' என்று படத்தின் இயக்குனர் ஜி.கேயைப் பாராட்டும் பாலாஜியின் குடும்பத் தொழில் எழுத்தறிவிப்பது.

''அப்பா ஹெச்.எம்மா இருந்தவர். தாத்தா, பாட்டன் எல்லோரும் வாத்தியாருங்கதான். ரிட்டையரான பிறகு அப்பா தொடங்கின நர்ஸரி ஸ்கூலை அண்ணன் நடத்திக்கிட்டு இருக்கார். அதுல நானும் ஒரு ஆசிரியர். தன்னோட குழந்தைக்கு அட்மிஷன் கேட்டு வந்த இயக்குனர் ராஜீவ்மேனனோட உதவியாளர் ரவி என்னைப் பார்த்துட்டு 'நீங்க ஏன் சினிமாவுல நடிக்கக்கூடாது'ன்னு கேட்டு என்னை உசுப்பேத்தினார். உடனே சண்டைப் பயிற்சி எடுத்துக்கிட்டு நடிக்க வந்துட்டேன். நான் இன்னைக்கு பரபரப்பா இருக்கேன்னா அதுக்கு காரணம், சரண் சார்தான்'' என்று ஜெமினி படத்தில் அறிமுகமானதை நெகிழ்ச்சியுடன் நினைவு கூறும் பாலாஜி, ஒரு பிராமணக் குடும்பத்துப் பையன்.

''உடம்பை வலுவாக்க மாமிசம் சாப்பிட வேண்டிய அவசியமே இல்லை. சாம்பார் சாதமும் தயிர் சாதமும் சாப்பிட்டே இவ்வளவு எடை ஏற்றினேன்'' என்றவர், ''நிஜத்துல மென்மையான ஆளா இருந்தாலும், என்னைப் பார்க்கிற பொண்ணுங்க வில்லனா பயத்தோடதான் பார்க்கிறாங்க. இதனால எனக்குக் கல்யாணம் நடக்குமான்னு தெரியலே! லவ் பண்றதுக்கு தைரியமும் இல்லீங்க'' என்று சோகமாகச் சொல்கிறார்.

• 'பெருக' படத்தில்...



– கலங்கும் வில்லன்

- ஜெய்

# பெண்கள் பெண்கள்தான்!



எப்பொழுது கதை எழுதினாலும் அதை என் மனைவியிடம் காட்டிய பிறகே பத்திரிகைகளுக்கு அனுப்புவது வழக்கம். அன்றும் அதுபோலவே... 'கூடா நட்பு' என்ற பெயரில் கதையெழுதி என் மனைவியிடம் காண்பித்தேன்.

படித்துவிட்டு, ''ஒரு தப்பு இருக்குங்க...'' என்றாள். வழக்கமாக இதுபோன்று அவள் சொன்னதில்லை. நான் கதையை மீண்டும் ஒருமுறை படித்துப் பார்த்தேன்.

பாபு என்பவனுக்குத் தன் புது மனைவி பற்றி... அவள் அழகைப் பற்றி கவிதை எழுத ஆசை. ஆனால் அவனுக்கு அந்த ஞானம் இல்லாததால், தன் நண்பனின் உதவியை நாடுகிறான். பாபுவின் மனைவியை... அவள் அழகை வர்ணிப்பது தவறு என்று நண்பன் மறுக்க, பாபுவோ 'இதில் தவறில்லை... என் அனுமதியோடுதானே செய்கிறாய்' என்று சமாதானப்படுத்தி, தன் மனைவியின் புகைப்படத்தைக் காட்டி, ஒரு கவிதையைப் பெற்றுச் செல்கிறான். அந்தக் கவிதையைப் படித்த மனைவி பரவசப்பட, பாபு சில நாட்கள் கழித்து உண்மையைச் சொல்கிறான். ஆனால், அவன் மனைவி மிகவும் கோபமுற்று, உடனே அந்த நண்பனின் நட்பை முறிக்கச் சொல்கிறாள். என்ன இருந்தாலும் நண்பனின் மனைவியை வர்ணிப்பது... நாகரிகமற்ற கேவலமான செயல் என்பது அவள் வாதம்...

''இந்தக் கதையில் என்ன தவறு இருக்க முடியும்...?'' என் மனைவியிடம் கேட்டேன்.

''பாபுவின் மனைவியை வர்ணித்து சில கவிதை வரிங்க கதையில் வர்றதுதான் தவறு'' என்றாள்.

''அதில் என்ன தவறு இருக்கிறது...?''

''என்னங்க பேசறீங்க... உங்க கதையில வர்ற மனைவிக்கே யாரோ ஒருத்தன் தன்னைப் பத்தி வர்ணிச்சதைத் தாங்கிக்க முடியல... உங்க மனைவி என்னால மட்டும் எப்படி நீங்க ஒரு பொண்ணை வர்ணிச்சு எழுதறதைத் தாங்கிக்க முடியும்!''

எனக்குத் தலையைச் சுற்றியது.

பெண்கள் பெண்கள்தான்! ○

**கீதா**

# தொண்டு செய்யுங்கள்!

தினமும் தூங்கப்போகும் முன்பு இன்று ஜன ஸமுதாயத்துக்கு நாம் ஏதாவது கைங்கர்யம் பண்ணினோமா என்று கேட்டுக்கொள்ள வேண்டும். ஈச்வரனைப் பற்றிப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று தேவாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த மாதிரி, நாம் பரோபகாரம் பண்ணாமலே ஒருநாள் போயிற்று என்றால், அது நாம் பிறவா நாளே.

நாம் எத்தனை சின்னவர்களாக இருந்தாலும் நம்மாலும் முடியக்கூடிய சின்ன தொண்டு இல்லாமலில்லை. இப்படி அவரவரும் தனியாகவோ, ஸங்கமாகச் சேர்ந்தோ ஏதாவது பொதுநலக் கைங்கர்யம் பண்ணியே ஆக வேண்டும். தண்ணீரில்லாத ஊரில் ஒரு பத்துப் பேர் சேர்ந்து கிணறு வெட்டுவது; ஏதோ ஒரு பிள்ளையார் கோயில் மதில் இடிந்திருந்தால் அதை நாலு பேராகச் சேர்ந்து கட்டுவது; பூஜை நின்றுபோன ஒரு க்ராமக் கோயிலில் ஒரு காலப் பூஜைக்காவது நாலு பேரை யாசித்து மூல தனம் சேகரித்து வைப்பது; பசுக்கள் சொறிந்து கொள்வதற்கு ஒரு கல்லேனும் நாட்டுவது; நாம் படித்த நல்ல விஷயங்களை நாலு பேருக்குச் சொல்லுவது, எழுதுவது; இரண்டு ச்லோகமாவது, பாசுரமாவது, நாமாவளியாவது பாடி நாலு பேர் மனஸில் பகவானைப் பற்றிய நினைப்பை உண்டாக்குவது; குப்பை கூளங்களைப் பெருக்குவது - இந்த மாதிரி ஏதாவது தொண்டு அன்றன்றும் செய்ய வேண்டும். ஓசைப்படாமல் செய்ய வேண்டும் என்பது முக்கியம்.

குடும்பக் கடமைகளை விட்டுவிட்டு ஸோஷல் ஸர்வீஸ் என்று கிளம்ப வேண்டியதில்லை. அதையும் விடாமலே, இதுவும் கடமை என்ற உணர்வோடு சேர்த்துக் கொண்டு செய்ய வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



## மேஷம்:

தொட்டது துலங்கும். நினைத்த காரியம் கைகூடும். வீடு, வாசல் வாங்க ஏற்ற காலமிது. உத்தியோக உயர்வு, வேலையில் இடமாற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய தொழில் முயற்சி வெற்றி அளிக்கும். சிலருக்குத் தூரதேச பிரயாணம் செல்ல வேண்டியிருக்கும். சனீஸ்வரனுக்கு சனிக்கிழமைதோறும் எள்ளு விளக்கு ஏற்றவும்.

## ரிஷபம்:

போட்டிகளுக்கு இடையே வெற்றி அளிக்கும் வாரம். குழந்தைப் பேறு உண்டாகும். மனச்சலனம் தீரும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல்நிலையில் கவனம் அவசியம். வியாபாரிகளுக்குத் தொழிலில் இருந்த மந்தநிலை மாறி தொழில் சீர்படும். நெருங்கிய நண்பர்கள்/உறவினர்கள் விலகிச் செல்வார்கள். வியாழன்தோறும் குருவுக்கு நெய்தீபம் ஏற்றி அர்ச்சனை செய்து வரவும்.

## மிதுனம்:

எந்த ஒரு கஷ்டத்திலும் வெற்றிப் பாதையில் செல்வீர்கள். சுபகாரியம் கைகூடும். புதிய தொழில் துவங்கலாம். திருமணம் கைகூடும். உல்லாசப் பிரயாணம் செல்ல நேரிடலாம். தாயின் உடல்நிலையில் கவனம் தேவை. புதிய வேலை வாய்ப்பு வந்து அணுகும். மனதில் தைரியமும் துணிவும் இருக்கும். மாணவ/மாணவியருக்கு கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். ராகு/கேதுவை வழிபட்டு வரவும்.

## கடகம்:

போட்டி, பந்தயங்களில் வெற்றி பெறுவீர்கள். உத்தியோகத்தில் மேன்மை கிட்டும். சிலருக்கு வீடு/தொழில் மாற்றம் கிட்டும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரிகள் நல்ல பலனை அடைவார்கள். வழக்கு விவகாரம் தீரும். அனாவசியமான செலவுகள் கட்டுக்குள் வரும். குரு/சனி வழிபடுதல் நலன் தரும்.

## சிம்மம்:

நன்மையும், தீமையும் கலந்த வாரம். அளவான பேச்சு இருக்க வேண்டும். வாகனத்தில் செல்லும் போது கவனம் தேவை. தொழில் சற்று சாதாரணமாகப் போகும். புதிய முதலீடுகளைத் தள்ளிப் போடவும். மாணவ/ மாணவியர் படிப்பில் கவனம் செலுத்தவும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு சிறந்தது.

## கன்னி:

லட்சியங்கள் யாவும் வெற்றியடையும். தனம், வாக்கு, புகழ் மேலோங்கும். வீடு/வாகனம் வாங்கலாம். திருமணம் கைகூடும். குழந்தைப்பேறு கிட்டும். உத்தியோக விஷயமாக வெளிநாடு செல்லக்கூடிய வாய்ப்பு அமையும். வழக்கு வெற்றியளிக்கும். பூர்வீகச் சொத்துக்கள் பாகப்பிரிவினை ஆகும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். ராகு/ கேது வழிபாடு சிறந்தது.

## துலாம்:

மனநிறைவு தரும் வாரம். எண்ணங்கள் யாவும் நிறைவேறும். தனம், வாக்கு, குடும்பம் மேலோங்கும். மகப்பேறு ஏற்படும். ஆரோக்கியம் பாதிக்காது. நீண்டநாள் பிரார்த்தனை நிறைவேறும். வியாபாரிகளுக்குத் தொழில் முன்னேற்றம் கிட்டும். கணவன்/ மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் வரும். குரு/சனி வழிபாடு நலம் தரும்.

## விருச்சிகம்:

பொருளாதாரப் பற்றாக்குறை நீங்கும். குடும்பத்தில் சந்தோஷமான காரியங்கள் நடக்கும். குழந்தைகள் இடம்மாறிச் செல்வார்கள். உடல்நிலையில் போதிய முன்னேற்றம் கிட்டும். நீண்டதூரப் பிரயாணம் அமையும்.

திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் நடக்கும். உத்தியோக உயர்வு கிட்டும். குரு/ராகு/கேது வழிபாடு நலம் தரும்.

### தனுசு:

**சு**பகாரியம் கைகூடும். மாணவ/மாணவியர் தேர்வில் அதிக மதிப்பெண்கள் வாங்குவார்கள். வழக்கு வெற்றியளிக்கும். வராத பணம் கைக்கு வந்து சேரும். உத்தியோக நெருக்கடிகள் குறையும். சத்ருக்களால் தொல்லை வராது. வெளிநாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். தொழில் அபிவிருத்தி அடையும். சனி/ராகு/கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

### மகரம்:

**ம**னக்குறைகள் நீங்கி நிறைவு பெறும் வாரம். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். தடை விலகித் திருமணம் நடக்கும். உத்தியோகத்தில் நல்லநிலை காணப்படும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். குடும்பத்தில்

# நடப்பது நடக்கும்!

4.12.2005 முதல் 10.12.2005 வரை














தஞ்சை பரத்வாஜ்



* படம் : ஸ்ரீஹரி



# பரத்வாஜ் பதில்கள்

**எ**னது மகனுக்கு வேலை மற்றும் திருமண வாழ்வு எப்படி அமையும்?

- வி. சந்திரசேகர், சென்னை

தங்கள் பையனுக்குத் தற்பொழுது குருதசையில் சுக்ரபுத்தி நடைபெற்று வருகிறது. ஆதலால், எந்த ஒரு விஷயத்திலும் பிடித்தம் இல்லாமல் இருக்கும். 36வது வயதில் திருமணம் நடக்கும். நன்கு படித்த, பண்புள்ள பெண் அமைவாள். பையன் ஜாதகப்படி வெளிதேசம் சென்று சம்பாதிக்கும் அமைப்பு உள்ளது.

**எ**ன் மகனின் திருமணம் எப்போது நடைபெறும்? வேலைவாய்ப்பு எப்படி உள்ளது?

- இரா.வெங்கட்ராமன், சேலம்

தங்கள் பையன் ஜாதகப்படி 10.1.2006க்குப் பிறகு திருமணம் கைகூடும். படித்த, வேலையில் உள்ள பெண் மனைவியாக அமைவாள். பெற்றோரை விட்டு அயல்நாடு சென்று வேலை செய்யும் பாக்கியம் உள்ளது. சர்ப்பதோஷம் உள்ள பெண்ணாகச் சேர்க்கவும்.

**எ**ன் மகனுக்குத் திருமணம் எப்போது அமையும்?

- பங்கசம் நடராசம், மகாதேவிபட்டினம்

உங்கள் பையனுக்கு 31 வயதில் திருமணம் நடக்கும். பரிகாரம் தேவையில்லை. படித்த, பண்புள்ள, உறவில்லாத இடத்தில் பெண் அமையும். புதன் தசை நடப்பதால் இல்லற வாழ்வு நன்றாக இருக்கும்.

**எ**னது மச்சினன் திருமணம் எப்பொழுது நடக்கும்? பரிகாரம் ஏதாவது செய்ய வேண்டுமா?

- எஸ். சுரேஷ், சென்னை - 91

தங்கள் மச்சினருக்கு 42 வயதில் திருமணம் முடியும். உடன்பிறப்பு இருவர் உள்ள வீட்டில் பெண் அமையும். குருதசை 29.4.2006-ல் முடிவு பெறுகிறது. அதன்பிறகு வரும் சனிபுத்தியில் உடன் திருமணம் நடக்கும். பரிகாரம் வேண்டாம்.

சுபகாரியம் நடக்கும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். சந்தான பாக்கியம் கிடைக்கும். குரு/சனி வழிபாடு நலம் தரும்.

### கும்பம்:

**நீ**ண்டகால கனவுகள் நிறைவேறும். எதிர்ப்புகளுக்கிடையே வெற்றிக் கொடியை நாட்டுவீர்கள். பணப்பற்றாக்குறை வராது. பெருந்தொகையைக் கடனாகக் கொடுக்கக்கூடாது. உணவுக் கட்டுப்பாடு அவசியம். வீடு வாங்க நல்ல நேரம். யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். பத்திரிகையில் பெயர், புகழ் வரும். தெய்வபலத்தால் நற்பலனை அடையலாம். ராகு/கேது வழிபாடு சிறந்தது.

### மீனம்:

**செ**ல்வச் செழிப்பு தரும். வாக்குவன்மை மேலோங்கும். முயற்சிக்கும் காரியம் வெற்றி பெறும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் கிட்டும். மனைவியை விட்டுத் தூரதேசம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. செலவுகள் கட்டுக்குள் இருக்கும். மாணவ/மாணவியர் நற்பலனை அடைவர். பொருளாதாரப் பற்றாக்குறை வராது. குரு/ராகு/கேது வழிபாடு சிறந்தது.



# நிலவில் நிலம் விற்கிறார்கள்!

இஸ்ரேலியப் பிரதம மந்திரி ஏரியல் ஷரோனுக்கு 'புல்டோஸர்' என்று பெயர் வைத்தவரின் வாயில் எவ்வளவு சர்க்கரையை வேண்டுமானாலும் அள்ளி அள்ளிப் போடலாம். முப்பதாண்டுகளுக்கு முன்னால் அரும்பாடுபட்டுத் தான் வளர்த்த லிக்குட் கட்சியிலிருந்து திடீரென்று சென்ற வாரம் வெளியேறி விட்டார்.

காஸாவிலிருந்தும் மேற்குக் கரையிலிருந்தும் இஸ்ரேலியப் படைகளை ஷரோன் விலக்கிக் கொண்டது அவரது லிக்குட் கட்சிக்குப் பிடிக்கவில்லையாம். அவற்றை பாலஸ்தீனத்



● ஏரியல் ஷரோன்

துக்கு விட்டுக் கொடுக்கக் கூடாது என்பது லிக்குட் கட்சியினரின் வாதம். ஷரோன் பாலஸ்தீனியர்களைக் கடுமையாக எதிர்த்து வந்தவரையில் லிக்குட் கட்சிக்கு அவரைப் பிடித்து வந்தது. ஆனால் சமீப காலமாக இந்த புல்டோஸர் கிட்டத்தட்ட பாலஸ்தீனியர்களோடு கைகுலுக்கி, ஒன்றாக காபி சாப்பிடும் வரை போய்விட்டதால் கட்சிக்கு ஏக கடுப்பு.

பார்த்தார் ஷரோன். கட்சியிலிருந்து விலகுவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. விலகிவிட்டார். புதிதாக ஒரு கட்சி தொடங்கியிருப்பதாகவும் அறிவித்திருக்கிறார். 'லிக்குட் கட்சிக்கு வாலாக இருந்தால்தான் இஸ்ரேலுக்குத் தலையாக இருக்க முடியும் என்றால், நான் அத்தகைய ஒரு தலையாக இருக்க விரும்பவில்லை' என்று அடித்துச் சொல்லிவிட்டார்.

எழுபத்தொரு வயதாகிவிட்டது. அதனால்தானோ என்னவோ சற்றுத் திருந்தி இருப்பவர்போல் காணப்படுகிறார். 'இஸ்ரேலின் எல்லை தெளிவாக வரையறுக்கப்பட வேண்டும். பாலஸ்தீனத்துக்குச் சிறிது விட்டுக் கொடுத்தால் பரவாயில்லை' என்று வேறு சொல்கிறார்.

வரும் மார்ச் மாதம் தேர்தல் நடைபெறவுள்ளது. பெரும்பான்மை பெற்று ஷரோனின் புதிய கட்சி வெற்றி பெறும் என்று தேர்தல் கணிப்புகள் இப்பொழுதே அடித்துச் சொல்லத் தொடங்கிவிட்டன. ஜார்ஜ் புஷ் எப்பொழுதும் போல் ஷரோனின் பக்கம் முதுகு சாய்ந்து நிற்கிறார் (71 வயது ஆனால் 'தான் ஷரோன் போல் இரண்டு இன்ச் திருந்துவார் போலும்).

ஷரோன் இன்னமும் தனது கட்சிக்குப் பெயர் வைக்கவில்லை. 'தமது புதிய அரசியல் நிலைப்பாட்டை அறிவிக்கும்படி கவர்ச்சிகரமான ஒரு பெயர் இருந்தால் சொல்லுங்களேன்' என்று கேட்டுக் கொண்டபொழுது, முதலில் பரிசீலனைக்கு வந்த பெயர் 'தேசிய பொறுப்பு'. அப்படியென்றால் மற்ற கட்சிகள் எல்லாம் 'தேசிய பொறுப்பில்லாத கட்சிகளா' என்று பத்திரிகைகள் கிண்டலடித்திருக்கின்றன. அடுத்து வந்த பெயர் 'நம்பிக்கை'. இதுவும் ஒத்து வரவில்லை.

'கேட்டவுடன் பற்றிக் கொள்வதுபோல் இருக்க வேண்டும். அந்த வார்த்தையை உச்சரிக்கும்பொழுதே உள்ளத்தைப் பிசைய வேண்டும். அப்படி ஒரு பெயர்தான் கட்சிக்குத் தேவை' என்று ஷரோன் தரப்பு ஆட்கள் சொல்லியிருக்கின்றனர். எத்தனையோ பெயர்களை யோசித்து



## உலகம் இவ்வளவுதான்

மண்டை காய்ந்த கட்சிக் கண்மணிகள், இறுதியில் 'ஏரியல்' என்ற தங்களது தலைவரின் முதல் பெயரையே கட்சிக்கும் வைத்து விடலாமே என்று சொல்லி வருகிறார்கள். இதுவும் பிடிக்கவில்லையென்றால் 'புல்டோஸர் முன்னேற்ற கட்சி' என்று வைக்கலாம். சுருக்கமாக பு.மு.க என்று அழைக்கலாம். இப்படிச் சுருக்கமாக எதையாவது சொல்லி அழைத்தால்தான் அது கட்சியின் பெயர் போலவே இருக்கிறது.

'பரந்து விரிந்த காலியிடங்கள், குறைந்த புவியீர்ப்பு விசை, தலையை நீட்டி எட்டிப் பார்த்தால் பூமிப்பந்து. ஒரு ஏக்கர் 300 யுவான்தான் (நம்மூர் மதிப்பில் சுமார் 1800 ரூபாய் மட்டுமே). இப்பொழுதே வாங்கிப்போடுங்கள்' என்கிறது பெய்ஜிங்கில் உள்ள லூனார் வில்லேஜ் சயின்ஸ் அண்ட் டெக்னாலஜி எனும் நிறுவனம். இவர்கள் ஃப்ளாட் போட்டு கூவிக் கூவி விற்றுக் கொண்டிருப்பது சீன நிலங்களை அல்ல, நிலா நிலங்களை(!) அக்டோபர் 19-ல், தொடங்கப்பட்டது முதல் 49 ஏக்கர் நிலா நிலத்தை இந்நிறுவனம் விற்றிருக்கிறது. அதுவும் மூன்றே நாட்களில். அடுக்குக் கட்டடமோ, கல்யாண மண்டபமோ, ப்ரௌஸிங் சென்டரோ கட்டலாம் என்று ஆசைப்பட்டு 34 சீனர்கள் நிலாவில் ஃப்ளாட் வாங்கிப் போட்டிருக்கிறார்கள். பட்டா மட்டும்தான் பாக்கி என்கிற நிலையில், சீன அரசாங்கம் நிலா நிறுவனத்தை அநியாயமாக இழுத்து மூடிவிட்டது. 'நாங்க என்ன சார் தப்பு செஞ்சோம்? நிலாவுல ஃப்ளாட் போடக்கூடாதுன்னு சட்டத்துல எழுதியிருக்கா?' என்று அப்பாவித்தனமாகக் கேட்கிறார்கள். ஐயோ பாவமாகத்தான் இருக்கிறது. ஆனால் இவர்களது தலைமைச் செயலகம் எங்கே என்று கேட்டால், பகீர் என்கிறது. அமெரிக்காவிலாம். நிலவை மட்டுமாவது விட்டுவைக்கக் கூடாதா?

- மருதன்



# ஜெயம் தரும்



வாரம் ஒரு வாசகர் குடும்பம்

ஜெயங்கொண்டம் கடை வீதி. காயத்ரி வெல்டிங் இன்ஜினியரிங் ஒர்க்ஸின் கிளைத் தொழிலகம். துளை போடும் எந்திரத்தின் இரைச்சல். கடைசல் மெஷினின் கதறல். இத்தனை அதிகபட்ச டெஸிபல் ஓசைக்கு மத்தியிலும் ஒய்யாரமாய் அமர்ந்து இளைஞர் ஒருவர் புத்தகம் வாசிப்பதில் மூழ்கிப் போயிருந்தார். இரும்படிக்கும் இடத்தில் ஈக்கு என்ன வேலை? அதுவும் அவரின் கைகளில் இருந்தது அந்த வார கல்கி! அப்படியே அவரை ஓரங்கட்டிப் பேசினோம்.



• பணியிடத்தில் செந்தில்குமார்...

“வாரா வாரம் கல்கி வந்ததும் உடனே படிச்சு முடிச்சாத்தான் எனக்கு மத்த வேலையே ஓடும். அப்புறமா பட்டறைக்கு வர்ற சின்ன வேலை, பெரிய வேலை எல்லாத்தையும் இழுத்துப் போட்டு செஞ்சுக்கிட்டே இருப்பேன்ங்க!'' என்ற செந்தில் குமாருக்கு வயது முப்பத்தி மூன்று. திருமணமானவர். மனைவி, மஞ்சுளா. முரளிதரன், ஹரிஹரன் என்று இரண்டு குழந்தைகள். ஐ.டி.ஐ. டர்னர் படிப்பு முடித்து, அப்பாவின் வெல்டிங் இன்ஜினியரிங் ஒர்க்ஸில் வேலைக்குச் சேர்ந்த பிறகும் படிப்புத் தாகம் இவரை விட்டு விலகவில்லை. தற்போது அஞ்சல்வழிக் கல்வியில் எம்.பி.ஏ. இரண்டாமாண்டு பயின்று வருபவருக்கு, இந்தியில் பேசவும் எழுதவும் வேண்டுமென்கிற ஆர்வம். அதையும் கற்று வருகிறாராம்.

“எனது இந்த எல்லா முயற்சிகளுக்கும் மூலகாரணம் என் அப்பா நடராஜன் தான். நான் கல்கி வாசித்து வருவது கடந்த பத்து வருடங்களாகத்தான். ஆனால், என் அப்பா கல்கியின் நாற்பதாண்டு கால வாசகர். அவரை நீங்கள் அவசியம் சந்திக்க வேண்டும்!'' என்றவர், நம்மை வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.



• அப்பா, அம்மா, தங்கையுடன்...

விருத்தாச்சலம் செல்லும் சாலையில் அமைந்திருக்கிறது அவர்களது இன்ஜினியரிங் ஒர்க்ஸ் கம் வீடு. அறுபத்து மூன்று வயதாகும் நடராஜன், எட்டாம் வகுப்பு வரை படித்தவர். ஆரம்பத்தில் அப்பாவுடன் சென்று தச்சு வேலை பார்த்து வந்த நடராஜனுக்கு, எங்கே கிராமத்திலேயே தங்கி

விட்டால், அப்பாவைப் போலவே தாமும் பொருளாதாரத்தில் பின்தங்கியே இருந்து விடுவோமோ என்கிற எண்ணம். உடனேயே யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு விட்டிருக்கிறார்.

தன்னுடைய தினசரிக் கூலியில் சேமித்து வைத்திருந்த பத்து ரூபாயை எடுத்துக்கொண்டு ஜெயங்கொண்டம் வந்தபோது நடராஜனுக்கு வயது பத்தொன்பது. இரவுகளில் திண்ணையில் உறக்கம். பகலில் கிடைக்கின்ற இடங்களில் தச்சு வேலை. நுணுக்கமான தொழில் வேலைப்பாடுகள். படிப் படியாக முன்னேறி, தச்சு



# ஜெயங்கொண்டம்!

வேலைகளைத் தனியாக காண்ட்ராக்ட் எடுத்துச் செய்திருக்கிறார். நாளடைவில் அப்படியே இரும்புத் தொழிலுக்கும் காலம் அவரை இழுத்து வந்துவிட்டிருக்கிறது.

இருபத்தேழு வயதில் உறவுப் பெண் புனிதவள்ளியுடன் திருமணம். "அது ஒரு சுவையான கதைங்க" என்ற புனிதவள்ளி, கூறத் தொடங்கிவிட்டார்.

"குடவாசல்லேர்ந்து சின்ன வயசுல எங்க வீட்டுக்காரர் ஜெயங்கொண்டம் வர, நானும் சின்ன வயசுல தஞ்சாவூர் அம்மாப்பேட்டையிலேர்ந்து என் பாட்டியோட ஜெயங்கொண்டம் வந்துட்டேன். வந்த எடத்துல நாங்க வளர்ந்துக்கிட்டு இருக்கும்போதே எங்க ரெண்டு பேருக்குள்ள அன்பும் சேர்ந்து வளர ஆரம்பிச்சுடுச்சு. என்னோட வீட்ல இவரைக் கட்டிக்கக் கூடாதுன்னுட்டாங்க. அப்புறம் என்ன? அப்ப ஜெயங்கொண்டத்துல பழனிக்கு ஒரு டூர் போட்டிருந்தாங்க. சுற்றுலாவுல சேர்ந்து போயி பழனி மலையில கல்யாணத்தைப் பண்ணிட்டு ஊருக்கு வந்துட்டோம். எங்களோட வாழ்க்கையில பல ஜெயங்களை அள்ளித் தந்தது, தருது இந்த ஜெயங்கொண்டம்!" என்று பூரித்துச் சொன்னார்.

இந்தத் தம்பதியின் மூத்த மகன்தான் செந்தில்குமார். அதற்கடுத்து மூன்று பெண்கள். இரண்டு பெண்களுக்குத் திருமணமாகிவிட, மூன்றாவது பெண் காயத்ரி, எம்.எஸ்ஸி. மைக்ரோபயாலஜி படித்துவிட்டு, தொழிலில் அண்ணனுக்கு உதவியாக இருக்கிறார்.

வீட்டில் நாற்பது வருடங்களாக கல்கி வாங்கி வருகின்ற போதிலும், தான் கடந்த மூன்று மாதங்களாகத்தான் கல்கி வாசிப்பதாக வெளிப்படையாகப் பேசும் காயத்ரிக்கு, கல்கியில் மனம் கவர்ந்தது எங்கள் எம்.எஸ். தொடராம்.

"என்னோட எல்லா முன்னேற்றத்துக்கும் அடிப்படை என்னோட கடின உழைப்பு மட்டுமில்ல... ஒவ்வொரு விஷயத்திலும் எனக்கென உருவான எதிர்ப்புகளும்தான். அந்த விதத்துல எனக்கு கல்கில வர்ற 'வெற்றி உங்கள் சாய்ஸ்' தன்னம்பிக்கை டானிக்". அழுத்தமாகச் சொல்கிறார் நடராஜன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## ஆர். வெங்கடேஷ்

# ஒரு வார்த்தை!

சட்டென ஒரு கட்டத்தில் பேச்சு, கடுமையாகிவிட்டது. ராம்ஜி அமைதியானான். செல்வத்தின் முகத்தில் தெரிந்த வேகம் அவனைப் பேசவிடாமல் தடுத்தது. மேலும் அதே வழியில் பேசினால், கோபமும் வெறுப்பும் அதிகமாகலாம். விவாதம் அர்த்தமற்றுப் போய்விடலாம். எந்தப் பயனும் இல்லாமல் பேசுவதில் எந்தப் பொருளும் இல்லை. ராம்ஜி எழுந்து கொண்டான். ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, கட்டைச் சுவருக்கு அருகில் போய் நின்று கொண்டான்.

தெருவிளக்கு தூரத்தில் எரிந்து கொண்டிருந்தது. வீட்டுக்குத் திரும்பும் களைப்பு. மெதுவாக இரண்டு பெண்கள் சைக்கிளை மிதித்துக் கொண்டிருந்தார்கள். ஹான்டில்பாரின் ஒருபுறம் காய்கறிகள். பைக்கு வெளியே முருங்கைக்காய் துருத்திக் கொண்டிருந்தது. ஸ்டேஷனில் இறங்கி காய்கறி வாங்கிக்கொண்டு வருவார்களாக இருக்கும். இனிமேல் போய், பிள்ளைகளுக்கு படிப்புச் சொல்லிக்கொடுத்து, காலையில் செய்த சமையலையே கூட வைத்துச் சாப்பிட்டுப் படுத்துக் கொள்வார்கள், நாளை மீண்டும் அலுவலகம் ஓட.

ராம்ஜி சிரித்துக் கொண்டான். எல்லோர் வீடும் தன்னுடையதைப் போலவே இருக்கும் என்று நம்ப வேண்டியதில்லை. வித்தியாசமாகக் கூட இருக்கலாம். புறநகர் வாழ்வு ஒன்றுபோலவே இருக்க வேண்டும் என்று அவசியமில்லையே. சைக்கிள் ஓட்டிப் போகும் பெண்ணுக்குக் கல்யாணமே நடைபெறாமல் கூட இருக்கலாம். அம்மா அப்பாவுக்குத் துணையாக வாழ்ந்து கொண்டிருக்கலாம். வீட்டுக்குப் போய், அம்மா கொடுக்கும் காபியைக் குடித்து விட்டு, அமைதியாக காலையில் தவறவிட்ட நாளிதழைப் படிக்கலாம்.

ஏன் இப்படிக் கூட இருக்கலாம். தனக்கு மட்டும் சமைத்துச் சாப்பிட்டு, தனியாளாக வாழ்பவளாக இருக்கலாம். எவ்வளவு சாத்தியங்கள். எவ்வளவு வண்ணங்கள். ஒரு பாத்திரத்தை வைத்துக்கொண்டு, அனைத்து சாத்தியங்களையும் பொருத்த முடியுமானால், எத்தனை கதைகளை சிருஷ்டிக்கலாம்? எத்தனை வர்ணனைகளைத் தொடுக்கலாம்? உண்மை. வாழ்வின் சாத்தியங்கள் போல்தான், எழுத்தின் சாத்தியங்களும். அதன் விரிந்த பரந்த கரங்களை யார் முழுமையாக அறிந்தவர்?

ராம்ஜி திரும்பிப் பார்த்தான். செல்வம் இன்னும் தன் இருக்கையிலேயே அமர்ந்திருந்தான். சற்றுமுன் நடந்த விவாதமோ, அதன் உக்கிரமோ இப்போது அறவே மறந்து போயிருந்தது. சொல்லப் போனால், சற்று அர்த்தமற்றும் தோன்றியது. எதற்காக இந்த விவாதம்? தேவையே இல்லையே என்றும் தோன்றாமலில்லை.

"சரிடா, நீ சொல்றா மாதிரி, சண்முகத்தோட எல்லாக் கதைகளையும் தொகுத்துடுவோம்டா..."

செல்வம் இதை எதிர்பார்க்கவில்லை போலும். முகத்தில் மின்னிய சந்தேகம், அதைத் தொடர்ந்த கேள்விக்குறி ஆகியவற்றை ராம்ஜியால் பார்க்க முடிந்தது.

"நான் சொன்னேன்ங்கிறதுக்காக ஒத்துக்க வேண்டாம்."

"இல்லை... அப்படியில்லை. நீ சொல்றதுலேயும் நியாயம் இருக்கு. எதிர்கால வாசகனுக்கு சண்முகம் இப்படியும் எழுதியிருக்கார்ங்கறது தெரியட்டும். நாம் யார் அவரையும் அவரோட புகழையும் தாங்கிப் பிடிக்கறதுக்கு. அவரோட புகழ் அவரோட எழுத்தினாலதானே வரப் போவுது."

செல்வம் இப்போது யோசிப்பவன் போல் அமைதி காத்தான். இவ்வளவு நேரம்

தன் கருத்துக்களில் தீவிர மாக இருந்தவன், இப்போது தன் மீதே சந்தேகம் வந்த வன் போல் நின்றான். எதிர் கருத்து இருக்கும் வரை, தன் கருத்தைத் தீவிரமாக முன் வைப்பதில் இருந்த முனைப்பு, இப்போது சட்டென மாறினவுடன், கூடுதல் பொறுப்பு போல் தோன்றத் தொடங்கிவிட்டது.

"படிக்கறவனும் கிரிட்டிக்ஸும் இதைச் சரியாகப் புரிஞ்சுக் கணும். வேணும்னா, முன்னால நல்ல முன்னுரை ஒண்ணு எழுதிடலாம். சண்முகத்தின் எழுத்து பல தரத் துடையது. அதில் ஏற்ற இறக் கங்கள் இருக்கலாம் அப் படின்னு... என்ன சொல்ற?"

ராம்ஜிக்கு இது அவ்வளவு சரியாகத் தோன்றவில்லை. நாம் யார் சண்முகத்துக்கு அரண் அமைக்க? ஒரு மனிதன் தன் வாழ் நாளில் பல தரத்தில் எழுதுவதும், பல தேவைகளுக்கு எழுதுவதும் சகஜம்தானே? அதற்குப் போய் எதற்காக ஒரு புதிய நியாயம் சொல்லி, அண்டைக் கொடுக்க வேண்டும்? யாருக்காகப் பயந்து?

"இல்லைனா, ரொம்ப சுலபத்துல சண்முகத்தைப் புறக்கணிச்சுடுவாங்க

ராம்ஜி. எதுக்கு எல்லார் வாயிலேயும் விழுந்து எழுந்துக்கணும் அவர்?"

ராம்ஜி இதைத்தான் முதலில் இருந்து சொல்லி வந்தான். சற்று முன் நடந்த கடுமையான விவாதத்துக்கும் இதுவே காரணமாயிற்று. அப்போது எதிர்கட்சியாக இருந்த செல்வம், இப்போது சட்டென இப்படி மாறிப் பேசுகிறான். அக்கறைதான் காரணம்.

சண்முகம் இறந்து போய் கிட்டத்தட்ட இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. அவர் இருந்தபோது மூன்று தொகுதிகள் சிறுகதைகள் வெளியாகியிருக்கின்றன. தொகுதிகள் வந்த காலத்தில், அவர் எழுத்தின் முக்கியத்துவம் பற்றி நிறைய பேசியிருக்கிறார்கள். அவர் முன் வைத்த கருத்துக்கள், எழுதிய விதம் எல்லாம் அன்றைய தேதிக்குப் புதிதாக இருந்ததால், எல்லாரும் நிறையவே படித்திருக்கிறார்கள். கொஞ்ச நாளிலேயே அவருக்கு ஒரு கல்ட் ஃபிகருக்கான அந்தஸ்து கிட்டவும் செய்தது.

அப்புறம், பேச்சே இல்லை. வழக்கம் போல், தமிழ்ச் சமூகத்துக்கு எவ்வளவோ முக்கியமான வேலை. அவரை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற அவசியமென்ன. சுலபத்தில் மறந்தும் போய் விட்டது. அவ்வப்போது, எங்கேனும் ஒன்றிரண்டு சிறுகதைகள் மீண்டும் மீண்டும் பிரசுரமாகும். அல்லது தேர்வாளர்கள் வசதிக்கேற்ப, அவர்களது தேவைக்கேற்க மீண்டும் மீண்டும் ஒரு சில கதைகளே பிரபலப்படுத்தப்பட்டன. இந்தத் தேர்வுகளுக்குப் பின் இருக்கும் அரசியல்தான் ராம்ஜியை அதிகம் வெறுப்படையச் செய்தது.

முதல் வேலையாக அவர் எழுதிய அனைத்து எழுத்துக்களையும் தொகுக்க வேண்டும் என்று முனைந்தபோது, உடன் வந்து சேர்ந்து கொண்டவன் செல்வம். அவனுக்கும் சண்முகத்தின் எழுத்தின் மேல் இருந்த அக்கறை, வேலையைத் துரிதப்படுத்தியது. செல்வத்துக்குச் சின்னதாக ஒரு பதிப்பகமும் இருந்தது இன்னும் வசதியாகப் போயிற்று. வங்கியில் செய்யும் வேலைநேரம் போக, அவ்வப்போது கவிதைகள் எழுதுவதுடன் புத்தகங்களும் வெளியிட்டான் செல்வம்.

அவனே சண்முகத்தின் எழுத்துக்களை வெளியிட முன்வந்தான். பழைய இதழ்கள், தொகுதிகள், முதல் பதிப்பு நூல்கள் என்று ஒன்றுவிடாமல் தேட, அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடைக்கத் தொடங்கின. ஆரம்பித்தபோது இருந்த வேகம், தடைகளைச் சந்திக்க சந்திக்க மெல்ல மட்டுப்படத் தொடங்கியது. ஒரு மாதிரியாக எல்லா படைப்புகளும் கிடைப்பதற்குள், கிட்டத்தட்ட ஒன்றரை இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்னும் வேறெங்கேனும் அவர் எழுதியிருக்கக்கூடும் என்ற சந்தேகம் ராம்ஜிக்கு நிரம்பவே உண்டு.



நீண்ட இடைவெளிக்குப் பிறகு அசோகமித்திரன் ஒரு புதிய நாவலை எழுதிக் கொண்டிருக்கிறார். இந்த நாவல் அவரது இளமைக் கால நினைவுகளை ஒட்டி அமைந்திருக்குமாம். 'என்னுடைய இளமைக் காலத்தைப் பற்றி இன்னமும் நிறைய சங்கதிகளை சொல்லாமலேயே விட்டு வைத்திருக்கிறேன்' என்கிறார் அவர். நேரம் கிடைக்கும் பொழுது ஆங்கிலத்திலும் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வருகிறார்.

எல்லாவற்றையும் சேர்த்து வைத்துப் படிக்க ஆரம்பித்தபோதுதான், ஒரு விஷயம் தெளிவானது. சண்முகம், எல்லாவற்றையும் தன் தொகுதிகளில் சேர்த்துக் கொள்ளவில்லை. அவரே தேர்ந்தெடுத்த கதைகளை மட்டுமே தன் தொகுதியில் போட்டுக் கொண்டிருக்கிறார். தன் எழுத்தில் உள்ள ஏற்ற இறக்கம் பற்றிய தெளிவு அவருக்கே இருந்திருக்கிறது.

"நாம எல்லாத்தையும் சேர்த்துப் போடணுமா?" ராம்ஜி.

"போட வேண்டியதுதான். இது நல்லது. இது நல்லாயில்லன்னு சொல்ல நாம யாரு? நம்ம வேலை, அவரோட எழுத்துக்கள் அத்தனையும் கிடைக்கச் செய்யறதுதான். படிக்கறவனுக்குச் செய்யற பெரிய உதவியிது. ஆனா இந்தத் தொகுதி அனாவசியமா அவரோட புகழைக் கெடுக்கக் கூடாது இல்லையா?"

"பின்ன ஏன் அப்படிப்பட்ட எழுத்தை அவர் எழுதணும்? அவர் எழுதறது தப்பில்லன்னா, அதைத் தொகுக்கறதும் தப்பில்ல

தான்."

ராம்ஜிக்கு கொஞ்சம் ஆயாசமாக இருந்தது. உண்மை. எதற்கு இப்படிப்பட்ட தரம் குறைந்த எழுத்துக்களை எழுத வேண்டும்? இதில் எழுத்தாளனைக் குறை சொல்ல வேண்டுமா? இப்படிப்பட்ட கதைகளைக் கேட்டுப் பெற்ற பத்திரிகைகளைக் குறைசொல்ல வேண்டுமா? தெரியவில்லை. எவ்வளவோ காரணங்கள் இருந்திருக்கலாம். பணத்தேவை, புகழ் தேவை, குறைந்தபட்சம் உதவ முன்வரும் நண்பர்களுக்காக எழுதிக் கொடுப்பது போன்ற எத்தனையோ சாத்தியங்கள். அல்லது வளரும் வேகத்தில் எல்லாவற்றையும் எழுதிப் பார்த்துவிட வேண்டும் என்ற துடிப்பு கூட காரணமாக இருக்கலாம்.

பின்னர் அவரே அவைகளைப் புத்தகமாக்க முனையும்போது, அவர் உள்ளே இருக்கும் உண்மையான இலக்கிய ரசிகன், பல கதைகளைப் புறந்தள்ளியிருப்பான். சில கதைகளைப் பொறுக்கி எடுத்திருப்பான். அவை மட்டுமே தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

இன்றைக்குப் போய் அவர் ஏன் அப்படிப்பட்ட குறை கதைகளை எழுத வேண்டும் என்று கேள்வி கேட்டால், யாரால் பதில் சொல்ல முடியும்?

"அப்படியில்ல செல்வம். எல்லாத்தையும் தொகுத்துடலாம். அதனால புகழ் வந்தா ஒண்ணும் பிரச்னை இல்லை. அதே தொகுதியின் மூலமா கெட்ட பெயர் வந்தா, அதை எதிர்கொள்ளவோ, சரியான விளக்கம் தரவோ சண்முகம் இல்லைங்கறதை ஞாபகம் வெச்சுக்க வேண்டாமா? இன்னொன்னும் பார்க்கணும். நாம சொல்ற குறையுடைய கதைகளை எழுதிய அதே கைதான் சிறப்பான கதைகளையும் எழுதியிருக்கு."

"எப்படிடா, ஒரே கை ரெண்டையும் எழுத முடியும்? இதுல ஏதோ ஒண்ணு பொய்யாத்தானே இருக்கணும்?"

ராம்ஜிக்குத் தூக்கிவாரிப் போட்டது. செல்வம் கேட்பதில் உண்மையில்லாமலில்லை. தரம் என்ற ஒன்று தெரிந்த பின், எப்படித் தரமற்றவைகளை எழுத முடியும்? ஆரம்பத்தில் கொஞ்சம் குற்றங்குறைகளோடு தொடங்கி பின் வளர்ந்து வந்தார் என்றும் சொல்வதற்கில்லை. முதல் கதையில் இருந்தே அப்பழுக்கற்ற தரம் வெளிப்படுகிறது. நல்ல வாசிப்பு, நல்ல கல்வி, உலக ஞானம், எல்லாம் இருந்திருக்கிறது. ஆனால்,

நா.பா. காலத்தில் 'திண்ணைக் கூட்டம்' என்கிற வித்தியாசமானதொரு கூட்டம் நடைபெற்று வந்தது. இலக்கிய அன்பர்களின் வீடுகளில் மாதம் ஒரு மாலையில் கூடும் திண்ணை, மறுபடி வரும் ஜனவரி முதல் திருப்பூர் கிருஷ்ணனால் கூட்டப்படவிருக்கிறது.



பின்னால் எழுதிய பல கதைகள், குறு நாவல்கள், இடக் கையால் எழுதினரகம். எப்படி இதை நியாயப்படுத்த முடியும்? தெரியவில்லை.

"பிரச்னை என்ன தெரியுமா?" செல்வம்.

செல்வமும் எழுந்து கொண்டான். ராம்ஜி நின்றிருந்த கைப்பிடிச் சுவர் அருகே வந்தான். வானம் இன்னும் இருட்டிக் கொண்டிருந்தது.

"சொல்லு.."

"நீ அனாவசியமா சண்முகத்தைத் தாங்கிப் பிடிக்கணும்னு நினைக்கறே. அங்க தான் பிரச்னை. சொல்றேன்னு தப்பா எடுத்துக்காத. அவரோட புகழ்ல நீயும் குளிர்காயணும்னு நினைக்கறே. அதுதான் பிரச்னை."

அப்படியா? ஒரு கணம் செல்வத்தின் முகத்தைப் பார்த்தான். அப்படியும் ஒரு காரணம் இருக்க முடியுமா? சண்முகத்துக்கும் எனக்கும் என்ன உறவு? நான் அவர் ரசிகன். அவர் எழுத்துக்களால் கவரப்பட்டவன். அவர் எழுத்து முக்கியமான எழுத்து என்று உளமாற நினைப்பவன். அவ்வளவுதான். அவர் பெருமையில் நான் எப்படிப் பங்கெடுத்துக் கொள்ள முடியும்?

"எப்படி சொல்ற?"

"சண்முகத்தின் எழுத்துகளைத் தொகுத்தவர்னு உன் பெயர் வரும் இல்லையா? உன் அந்தஸ்தை அது கொஞ்சம் தூக்கிவிடத்தானே செய்யும்."

"சில்லி..."



## விமர்சனத்தால் விரட்ட வேண்டாம்!

"இலக்கிய ஊடகங்களில் கவிதைக்கு மட்டும்தான் மனித உணர்வுகளைக் கிளறிவிடும் சக்தி இருக்கிறது. எனவே கவிதையில் கோஷங்களோ, பிரசாரமோ இருக்கக் கூடாது. இவை இரண்டும் இல்லாமல் கவிதை எழுத வருகிறவர்களை, விமர்சனம் என்ற பெயரில் விரட்டியடித்து விடாதீர்கள். அவர்களை முதலில் எழுத விடுங்கள்" - எப்போதுமே ஆவேசமாகப் பேசி, சிந்தனையைத் தூண்டும் பேராசிரியர் பெரியார்தாசன், இப்படிப் பேசியது பாக்கியம் சங்கர் எழுதி, நிவேதிதா பதிப்பகம் வெளியிட்ட 'வீடுகள் என்கிற அறைகள்' கவிதை நூல் வெளியீட்டு விழாவில்.

பெரியார்தாசனின் இந்த மிரட்டலில் முகம்வெளிறிப்போய் உட்கார்ந்திருந்தார்கள் கவிதையை விமர்சிக்க வந்திருந்த விமர்சகர்கள்.

உண்மையில் எரிச்சலாகத்தான் இருந்தது. சண்முகத்தின் எழுத்துக்களைத் தேடி அலைந்தபோது இருந்த உற்சாகம், கிடைத்தபோது அடைந்த மகிழ்ச்சி எல்லாம் இந்த அற்பத்தனத்துக்குத்தானா? நிச்சயம் இல்லை. அவர் மனைவி, நண்பர்கள் என்று ஒவ்வொருவராகப் போய்ப் பார்த்துப் பேசிப் பேசி ஒவ்வொரு அங்குலமாக சண்முகத்தருகே முன்னேறியது இத்தகைய ஒரு வார்த்தைக்குத்தானா? நிச்சயம் இல்லை. ஆனால், அதை அனைவரிடமும் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. ஒவ்வொரு மனதும் ஒவ்வொரு வண்ணம் கொண்டது. ஒவ்வொரு நோக்கம் கொண்டது. நோக்கங்களை நிமிர்த்தவா முடியும்? பதில் சொல்லித்தான் சந்தேகத்தை நிவர்த்தி செய்துவிட முடியுமா?

ஆனால், உண்மையில் சண்முகம் எழுத்தைத் தேட வைத்தது எது? கிடைத்த படைப்புகளைப் படித்துவிட்டு, எல்லாரும் சொல்வதைத் திரும்பச் சொல்லி, அதே பழைய மேற்கோள்களையே திரும்பத் திரும்ப மேற்கோள்களாக்கிவிட்டு, தன் வழியைப் பார்த்துக்கொண்டு போயிருக்கலாம். ஒன்றும் குறைந்துவிடப் போவதில்லை. ஆனால் இவ்வளவு அற்புதமாக எழுதிய ஒரு கை, ஒரு மனம், ஒரு புத்தி எப்படிப்பட்டதாக இருந்திருக்க வேண்டும்? அதன் நோக்கங்கள் எப்படிப்பட்டதாக இருந்திருக்க வேண்டும்? அதன் ஆசைகள், எதிர்பார்ப்புகள் எப்படிப்பட்டதாக இருந்திருக்க வேண்டும்?

சதையும் ரத்தமுமாக ஒரு எழுத்தாளன் தன் கனவுகளை வரைந்து வைத்திருக்கிறான். அதை அணுகிப் பார்ப்பதைப் போல் உற்சாகமும் நிறைவும் தருவது வேறுண்டோ? உண்மையில் அந்தத் தேடலும் அதன் அட்வென்ச்சருமே நிறைவளிப்பது. இதையெல்லாம் விளக்க முடியாது. இது உணர்வு சம்பந்தப்பட்டது. மகிழ்ச்சி சொல்லில் நிறைவுறாதது.

கிளம்பிவிட வேண்டும் என்று தோன்றியது. நிறைய விஷயங்களைப் புரியவைக்க முடியாது. சைக்கிளில் போகும் பெண், வீட்டுக்குப் போய் என்னவாக வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாம். அவள் இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டுமென்று நாம் வேண்டுமானால் ஆசைப்படலாம். சண்முகம் நல்ல கதைகள் மட்டுமே எழுதியிருக்க வேண்டும் என்று ஆசைப்படுவதும் அப்படிப்பட்டதுதான். ஆனால், அதெல்லாம் நமது ஆசைகள். நமது விருப்பங்கள். அப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும் என்று கட்டளையா இட முடியும்?

"சரி செல்வம், நான் கிளம்பறேன். நீயே பார்த்து செய். முடிஞ்சவரைக்கும் எல்லா கதைகளும் தொகுத்தாச்சு. அதெல்லாம் வெளியான வருஷப்படியே வரிசைப்படுத்தியிருக்கேன். அப்படியே போட்டுடு."

"முன்னுரை ஏதாவது எழுதறியா?"

ராம்ஜி ஒரு கணம் நின்றான்.

"சண்முகம் தன் சொந்தக் காலல நிற்பார். நல்லதும் கெட்டதும் அவருக்கே போய்ச் சேரட்டும். நாம யார் அவருக்கு முட்டுக்கொடுக்க?"

சொல்லிவிட்டு ராம்ஜி தெருவில் இறங்கி நடந்தான். ஒரு பெண் சைக்கிளில் அவனைக் கடந்து முன்னே போனாள். ○

# நீங்கள் கேட்டவை -தராசு

# வெள்ள நிவாரணம் ஒழுங்காய் கிடைக்குமா?



• இமாலய...



• ...வித்தை!

**● எஸ். மாலதி, மன்னார்குடி**

**? சினிமாவிலிருந்து அரசியலுக்கு நிறைய பேர் வருகிறார்கள். ஆனால், அரசியலிலிருந்து சினிமாவுக்கு வருபவர்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கிறதே, ஏன்..?**

! அது எதற்கு? அதான் அரசியலில் வீர வசனங்கள் பேசி, அவ்வப்போது முகமூடி மாற்றி, தேர்ந்த நடிப்பைக் காண்பித்து வருகிறார்களே!

**● என். மாணிக்கம், மின்னல்**

**? சுனாமி நிவாரணமே இன்னும் சிலருக்கு ஒழுங்காக வழங்கப்படாத நிலையில் வெள்ள நிவாரணம் மட்டும் ஒழுங்காய் கிடைக்குமா?**

! ஊழல் வெள்ளம் பெருக்கெடுக்கும் இந்தியாவில் அதற்கு மட்டும் நிவாரணமே கிடையாது.

**● சாந்தி சந்திரசேகர், லாலாபேட்டை**

**? 'விவகாரங்களில் நான் தலையிட மாட்டேன்' என்று குஷ்பு விவாத சர்ச்சையிலிருந்து ஜகா வாங்கிய கலைஞரின் சாமர்த்தியம் பற்றி...?**

! குஷ்பு விஷயத்தில் பின்வாங்கிய சாமர்த்தியம், சுஹாசினி விஷயத்தில் ஜாதியை இழுக்கும் சறுக்கலாகிவிட்டதே!

**● பால சரவணன், சென்னை-15**

**? ஆடுகளத்தின் தன்மையைச் சரியாகக் கணிக்கத் தெரிந்த நமது கிரிக்கெட் வல்லுனர்கள், தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொரு முறையும் மழைக்காலத்தில் சென்னையில் மேட்ச் வைக்கிறார்களே?**

! தமிழ்நாடு கிரிக்கெட் கூட்டமைப்பைக் கேட்டால், இந்திய கிரிக்கெட் கட்டுப்பாடு வாரியத்தைக் கை காட்டுவார்கள். அவர்கள் கொடுக்கிற தேதியைத் தானே நாங்கள்

• ஆறே...

• ... வரிகள்!

ஏற்க வேண்டியுள்ளது என்பார்கள். ரசிகர்கள் பேரிலும் தவறு இருக்கிறது. மழைக்காலம் என்று தெரிந்துதானே டிக்கெட் வாங்கினார்கள்? பிரச்னைக்குத் தீர்வு. கிரிக்கெட் மேட்சுகளின் எண்ணிக்கையைக் குறைப்பதே.

● ஏ.எஸ். யோகானந்தம், கலிங்கியம்

? நகர்ப்புறங்களில் உள்ள தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள், தினமும் காலை எட்டு மணி முதல் இரவு எட்டு மணி வரை இயங்க வேண்டும் என்று ப.சிதம்பரம் கூறியுள்ளது...?

! இதனால் வங்கிகளுக்குக் கூடுதல் வருவாய் கிடைக்காது; செலவுதான் தண்டத்துக்குக் கூடும். நஷ்டம், கடைசியில் மக்களுக்குத்தான். வங்கிகள் தற்போது குடியிருப்புப் பகுதிகள், வர்த்தகப் பகுதிகளில் வெவ்வேறு அலுவலக நேரங்கள் கொண்டுள்ளன. இதுவே போதும். வேலை நேரத்தில் சுறுசுறுப்புடன் இயங்கி வாடிக்கையாளரைத் திருப்திபடுத்துவதே முக்கியம்.



• ஜகாவும் சறுக்கலும்



• எட்டுமா?

● பி.கே.வரதராஜன், ஹைதராபாத்.

? மனிதனைப் போலவே நிறுவனங்களுக்கும் நேர்மை, உண்மை, நீதி, கற்பு, கட்டுப்பாடு போன்ற உன்னத குணங்கள் தேவைதானா?

! நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பில் உள்ளோர் இப்பண்புகள் உடையவராக இருந்தால் நிறுவனத்துக்கும் அவை பலம் சேர்க்கும்.

● அ.ஜெயேந்திரன், தஞ்சாவூர்

? ஜனநாயக முறையில் ஆட்சி மாற்றங்கள் ஏற்படுவது மக்கள் விழிப்புணர்ச்சி பெறுவதாலா? அல்லது மாற்றுத் தலைவர் மக்களை வசீகரிப்பதாலா? இல்லை, வாக்கு வங்கி சதவிகித கூட்டல் - கழித்தல் கணக்குதானா?

! பெரும்பாலும் ஆட்சியாளர்களின் மோசமான ஆட்சி / நிர்வாகமே மாற்றங்களை நாடும்படி மக்களைத் தூண்டுகிறது.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

? கிருஷ்ணகிரியில் வெள்ளச் சேதத்தைப் பார்வையிட வந்த மத்திய குழுவினருக்கு பொக்கே கொடுத்து வரவேற்றது சரியா...?

! அவர்கள் 'பெப்பே' சொல்லிவிட்டுப் போய்விடக் கூடாதே என்கிற அச்சத்தில் நீட்டப்பட்ட பொக்கேதான் என்பது அவர்களுக்கும் தெரிந்திருக்கும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

? கிரிக்கெட் ரசிகர்களின் ஏமாற்றம் குறித்து...?

! ஆலன் பார்டரின் 11,174 ரன்கள் என்ற சாதனையை முறியடித்த லாராவின் சாதனையை எண்ணிப் பாருங்கள்; அதுவும் மிகக் குறைவாக 121 டெஸ்டுகளில் என்பதை நினைத்துப் பாருங்கள். தென் ஆப்பிரிக்காவுடனான ஒரு நாள் போட்டியில் வெற்றிக் கோப்பையைப் பகிர்ந்துகொண்ட இந்திய அணியின் அபார ஆட்டத்தை அசைபோடுங்கள்... Think positive... ஏமாற்றம் விலகும்.

● கீதா, சென்னை - 4 ❐

? தலிபான் தீவிரவாதிகளால் கொல்லப்பட்ட ராமன்குட்டியை 'வீர இந்தியன்' என்கிறார் பிரதமர். தேச தியாகி என்று சொல்வது பொருந்துமா?

! இரண்டுமே சரியில்லை. 'வாழ்வதற்கு இங்கு வழி இன்றி வெளிநாடு சென்ற

❐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

கீதா,
பிளாக் 9A, ஷாந்தி அபார்ட்மென்ட்ஸ்
46, ரோஸரி சர்ச் சாலை,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004

இந்தியன்' என்று சொல்லலாம். இந்த நிலை இங்கே நீடிக்கும் வரை இத்தகைய துயரங்களும் நடக்கும்.

● க.வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

**? படத்தில் நடிக்கும் நடிகைகள், பெண்களின் கற்பு பற்றிப் பேசுவது அவர்களுடைய பேச்சுரிமையைக் காட்டுகிறதா? வாய் நீளத்தைக் காட்டு கிறதா?**

! 'படத்தில் நடிக்கும் நடிகைகள் கற்பு பற்றிப் பேசக் கூடாது' என்பதுபோல் நீங்கள் கேள்வியை அமைத்திருப்பது எதைக் காட்டுகிறது?.... சிந்திக்கவும்.

● முகவை முத்துசாமி, தொண்டி

**? 'வருகிற தமிழக சட்டசபை தேர் தலில் வாக்காளர் அடையாள அட்டை இல்லாமல் வோட்டுப் போட முடியாது' என்று தேர்தல் கமிஷன் அறிவித்துள் ளதே?**

! வாக்காளர் அடையாள அட்டை வழங்குவதில் பல ஓட்டைகள் இருப்ப தால், தேர்தல் நெருங்கும் சமயத்தில் கட்சிகளும் வற்புறுத்த, 'ஏதேனும் ஒரு அடையாளச் சின்னம் கொண்டு வாங்க' என்று சொல்லிவிடுவார்கள்.

● அ. அப்துல் காதர், விளாத்திகுளம்

**? சென்னை கிரிக்கெட் போட்டிக்கு வசூலித்த தொகையை வெள்ள நிவார ணத்துக்குத் தரலாம் என்ற ராமதாஸின் கோரிக்கை ஏற்றுக்கொள்ளக் கூடியதா?**

! அந்தக் கோரிக்கையையும் ஏற்க முடியாதவாறு பிரச்னை நீதிமன்றத்துக்குப் போய்விட்டது. அப்படிப் போகாமல் இருந்திருந்தால், ராமதாஸின் கோரிக்கை பகுதி அளவில் நிறைவேற்றக் கூடியதே. ஒரு நாள் போட்டியையொட்டி ஏராள மான செலவுகள் செய்ய வேண்டியிருந் ததைச் சுட்டிக் காட்டிவிட்டு, ஒரு கணிச மான தொகையை வெள்ள நிவார ணத்துக்கு நன்கொடையாக அளித்து டிக்கெட் வாங்கி யவர்களைத் திருப்திப்படுத்தி யிருக்கலாம்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? பீஹார் சட்டப்பேரவை தோல்விக்கு லாலு - பாஸ்வான் சண்டையே காரணம் என்று சோனியா காந்தி குற்றம் சாட்டியுள்ளாரே...?**

! பின்னே, மக்களின் விழிப் புணர்வுதான் காரணம் என்றா அவ ரால் சொல்ல முடியும்!



• அசைபோடும் ஆனந்தம்!



• தோல்வி விளக்கம்!

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8

**? 'ராப்ரிதேவி அரசின் தவறு களை மூன்று மாதங்களில் சரி செய்வோம்' என்று நிதிஷ்குமார் கூற, "அந்த வித்தையைப் பார்க்கத்தானே போகிறோம்!" என்று ராப்ரிதேவி பதில் கூறியுள்ளாரே...?**

! இமாலய தவறுகளை மூன்றே மாதங்களில் சரிசெய்துவிட முடியு மானால், அது நிஜமாகவே விந்தை தான், வித்தைதான்! சரியாகத்தான் பேசியிருக்கிறார் ராப்ரி.

● எஸ்.எம்.ஷாஜஹான், மேலப்பாளையம்

**? ஆறு திரைப்படம் பற்றி ஆறே வரியில் சொல்லுங் களேன்...**

! சூ
ர்
யா
த்
ரி
ஷா

**★ ரூ. 50/- பரிசு பெறுபவர்:**

பி.கே.வரதராஜன்,
ஃபிளாட் 203, இரண்டாவது மாடி,
எஸ்.வீஸ் ரமணா பாரடைஸ்,
ஈஸ்ட் ஆனந்த் பாக், மல்கஜ்கிரி,
ஹைதராபாத் - 500 047

நம்சி மட்டுமே மிஞ்சினான். அகிலா கவனித்தாள். உறவினர் சிலர் தவிர கூட்டம் கூட்டமாக வந்தவர்கள் போய் விட்டனர். கொடிபோர்த்தி மாலை சாத்தி அஞ்சலி செலுத்தி அனுதாபம் தெரிவித்து நிதியுதவி அறிவித்து ஆறுதல் கூறி சூறாவளி மழை வெள்ளம் வடிவது போல சிறுகச் சிறுகக் கலைந்து போய்விட்டனர். நம்சி மட்டுமே மிஞ்சியவன். குடும்பத்தைச் சேராதவன்.

கூடத்தில் அகிலாவையும் நம்சியையும் இரு குழந்தைகளையும் தவிர, பூ சாத்திய புகைப்படத்தில் சிரிக்கும் நாணாவும் ஒரு காமாட்சியம்மன் விளக்குச் சுடரும் தவிர, அந்த நிமிஷம் வேறு எவருமில்லை. மயானத் தீட்டுக்காகக் குளிக்கவும், மாட்டுக் கொட்டகையில் சமையலுக்குப் பெரிய அடுப்பு வைத்திருந்ததைக் கவனிக்கவும் இங்குமங்கும் ஓடியலைந்து கொண்டிருந்தனர். கூடம், சந்தடி ஓய்ந்த சூனிய நிசப்தத்தில் ஸ்தம்பித்திருந்தது.

பெரிய அண்டாவில் சோறு கொதிக்கும் மணமும் புகையும், திறந்த ஜன்னலுக்குள் வந்து மிதந்தன.

அதே ஜன்னல் வழியே தொலைவில் தெரிந்தது மயானம். சிதையில் விறகு வெடித்துப் பொறிகள் பறப்பதை அகிலா இமை உயர்த்திப் பார்த்தாள். அடிவயிற்றில் களைத்துச் சோர்ந்து படுத்துவிட்டிருந்த துக்கப் பாம்பு மீண்டும் தலை தூக்கி சீறி.... 'ம்ப்ம்ப்ம்' என்று அகிலாவிடமிருந்து ஒரு விசும்பல் வெளிப்பட்டது.

நம்சி தூரத்துச் சிதையிலிருந்து பார்வையை மீட்டாள். அவள் கண்களைப் பார்த்தான். ஒரு விநாடியில் இமைகளைத் தாழ்த்திக் கொண்டான்.

அவள் தேற்றிக் கொள்ள முயற்சி செய்தவாறு வெறிச்சிட்ட பார்வையில் அவனைப் பார்த்தான்.

"நீங்க வருவீங்கன்னு எதிர்பார்க்கலே..." என்றாள். அவன் வருத்தத்தோடு அவளைப் பார்த்தான்.

"போன வாரம் பேப்பர் படிச்சேன். பஸ்ஸு ஆத்துல முழுகறச்சே நீங்க சொர்ணா கையைப் புடிச்சதகூட கூட்டம் இடிச்சுத் தள்ளி அவளை ஒதுக்கி விட்டதாப் போட்டிருந்துச்சு."

நம்சி நிமிர்ந்து பார்த்தான். கண்களில் வெம்பிப்போன வெறுமை. கண்ணுக் கெட்டாத ஏதோ ஒரு சக்தியின் பிடியில் எல்லோருமே சிக்கித் தத்தளிப்பதை வெளிப்படுத்தும் வெறுமை. தலையசைத்தான்.

அடித்துச் செல்லும் காட்டாற்று வெள்ளத்தில் உயிருக்குயிராய் நேசித்த மனைவியைக் கைப்பிடியில் பறி

# உயிர் கூடும் நெடுஞ்சாலை






## டாபிகல் ஸ்டோரி

கொடுத்த நம்சியை விட்டுப் பார்வையை மீண்டும் ஜன்னலுக்கு மாற்றினாள். மயானத்துச் சிதை விறகுகளுக்கிடையே கொலையுண்ட நாணா வெந்து கொண்டிருப்பது நெஞ்சை முட்டியது. மடியில் தூங்கிவிட்டிருந்த மகன் கோபுவைக் கொண்டு போய் பெட்டில் படுக்க வைத்துவிட்டு திரும்ப வந்தாள்.

மீண்டும் அகிலாவின் அடிவயிற்றில் துக்கம் தலைதூக்கி மேலோங்கியது. உதடுகளைக் கடித்து அடக்க முயன்று தோற்றுப்போனவள்,



"நம்சி... நமக்கு மட்டும் ஏன்? நமக்கு மட்டும் ஏன்...?'' என்று குமுறினாள். தொண்டை கம்மியிருந்ததால் துக்கம் அம்மியில் நசுங்கியது போல் கரகரத்தது.

நம்சி அவளைப் பார்த்தபடி நின்றான். தலையில் அடித்துக்கொண்டே கேவியவள், கண்கள் வெறிச்சிட்டு மடிந்து சாய்ந்து விழுந்தாள். டொக்கென்று மண்டையில் அடிபட்ட ஒலி தெளிவாய்க் கேட்டது.

தன் கைப்பிடிக்குள் இருந்த குழந்தை நிர்மலாவை விலக்கிவிட்டு அவசரமாக நம்சி அருகே ஓடினான். மயங்கி விழுந்திருக்க வேண்டும். இமைகள் மூடியிருந்தன. அவன் திரும்பி வேகமாக மாடிப்படியை நோக்கி ஓடினான்.

யாரோ எதிர்ப்பட்டனர். ஒருவரா, இருவரா யார் என்று முகங்களைக்கூட கவனிக்க முடியாத பதற்றத்தோடு அவர்களிடம் சொன்னான்.

''அந்தம்மா மயங்கி விழுந்துட்டாங்க! ரெண்டு பேர் கூட இருங்க... நான் டாக்டரைக் கூட்டி வர்றேன். பக்கத்திலே டாக்டர் வீடு இருக்கா...?''

படியேறி வந்துகொண்டிருந்த மற்றொரு இளைஞன் முகத்தில் நம்சியின் பதற்றம் தொற்றிக் கொண்டது.

"என்ன... என்ன?'' என்றான்.

"அகிலா மயக்கம் போட்டுட்டானாம். போய் கையோட டாக்டர கூட்டியாறியா?'' என்று மேல்படியில் நின்ற மத்திம வயதுப் பெண் கூறினாள்.

"இதோ..." என்று வந்த இளைஞன் திரும்ப முயன்றான்.

"தம்பி... நில்லுங்க! நானும் வர்றேன். அவசரமா போகணும். ஏதாவது பைக் கெடைக்குமா?" என்று பதறியபடியே இளைஞனின் தோளைத் தொட்டான் நம்சி.

"எங்கிட்டே டி.வி.எஸ்.50 இருக்கு" என்று வேகமாகப் படியிறங்கினான் இளைஞன்.

மழை நின்றிருந்தாலும் கிராமத்துக் குறுஞ்சாலை, வந்துபோன அனுதாப அஞ்சலி வாகன டயர்களால் கசகசத்து சேறு குழைந்திருந்தது.

இளைஞன் மெதுவாகத்தான் வண்டி ஓட்ட வேண்டி வந்தது.

"எல்லாம் கொடூரம் சார்! மனுஷனே பூண்டோட அழிஞ்சு போயிடுவான் போல இருக்கு" என்றான் இளைஞன்.

நம்சி சேற்றில் டயர்கள் நெளிவதைக் கண்கொட்டாமல் பார்த்தான்.

"ரெண்டு கொழந்தைங்க. எட்டு வயசுப் பொண்ணு, மூணு வயசுப் பையன். என்ன கதி ஆவுமோ..." இளைஞனுக்குத் தன் வேதனையை யாரிடமாவது பகிர்ந்துகொள்ளும் வேகம்.

"ம்ம்ம்ம்" என்று முனகினான் நம்சி.

"வெட்டிச் சாச்சவங்களுக்கு பொண்டாட்டி பிள்ளை இருக்குமா, இருக்காதா சார்?"

"தெரியலே" நம்சி தன் சீட்டை இறுகப் பிடித்தான். சேறு சக்கரப் புதைவில் இருபுறமும் சிதறித் தெறித்தது.

"அவனுங்கள வெட்டிச் சாச்சிருந்தா இப்படிப் பொண்டாட்டி புள்ளைங்க கதறுமேன்னு ஒரு நிமிஷம் யோசிச்சிருப் பானுங்களா?"

இது யோசிப்பவர்களின் காலமல்ல. இளைஞனுக்கும் தெரியும். இவனே அந்த மலைப்பகுதியில் பற்றி எரியும் பழி வெறித் தீயில் சிக்கியிருந்தால் வேறு மாதிரிப் பேசுவான் என்று நினைத்தான் நம்சி.

"நாணா மாமா என்ன பாவம் பண்ணார் சார்? ரோடு போட்டாங்க. லாரி ஓட்டக் கூப்பிட்டாங்க. போவறதுக்குப் பயந்தாரு. அகிலா உடமாட்டேன்னு அப்போ சொல்லுச்சு. மிலிட்டரி பந்தோபஸ்து தர்றோம், நாங்க கியாரண்டின்னாங்க. ரோடு போடறதுக்கு லாரி ஓட்டறதுல என்னா குத்தம் இருக்கு சார்? ஏன் வெட்டிச் சாய்க்கணும்?"

நம்சியிடம் பதில் இல்லை.

பேசிக்கொண்டே வந்ததில் டாக்டர் வீடு வந்துவிட்டது. நல்ல காலம் டாக்டர் வீட்டில் இருந்தார். இளைஞன் மட்டும் உள்ளே சென்று விஷயம் சொல்லி டாக்டரை அழைத்து வந்தான்.

வெளியே வந்த டாக்டர், நம்சியைப் பார்த்துப் புருவம் சுருக்கினார். தெரிந்தவர்தான்... டாக்டர் பாலாஜி.

"அட நம்சி இல்லே... நாணா டெத்ல உன்னைப் பாக்கலியே!" சற்றே வியப்புடன் கேட்டார்.

"சார் நீங்களா? நீங்க இங்கே..." என்று நம்சி இழுத்தான்.

"போன மாசம் இங்க குடி வந்துட்டேன். என்னோட பேஷண்டுங்க இந்த ஏரியாலதானே அதிகம்!" என்றார் டாக்டர்.

"நான் மயானத்துக்கு முன்னாடியே போயிட்டேன் சார். தகனத்துக்கு ஏற்பாடு பண்ண வேற தோதா ஆள் கெடைக்



கலைஞரைப் பற்றிய டாக்குமெண்டரி ஒன்றை எடுத்து வருகிறார் கனிமொழி. விரைவில் முடியவிருக்கும் இப்பணியில் கேமரா, அல்போன்ஸ்ராய்.

கலே."

"எனிஹவ் ரொம்ப கொடூரம்பா! என்ன கூட்டம்... என்ன இன்வால்வ்மெண்ட்... என்ன அனுதாபம்... டீ.வியிலே கூட நியூஸ் காட்டினாங்கப்பா... எனக்குக் கண்ணு கலங்கிடுச்சு. அகிலாதானே அந்தம்மா பேரு! அவங்களுக்கு என்ன ஆச்சு?'' மடமடவென்று கேட்டுக் கொண்டே வேகமாகப் படியிறங்கி யமஹாவைத் தள்ளிக்கொண்டே பேசினார் டாக்டர்.

"டாக்டர் குறுக்கு வழியிலே வெள்ளம். சுத்து வழியிலேயே போயிடுங்க" என்று பின்னாலிருந்து குரல் கொடுத்தான் இளைஞன்.

"நீ டி.வி.எஸ். வச்சிருக்கியா... சரி... நீ பின்னாடி வந்துடு! நான் சுத்து வழியிலேயே போறேன்... நீ பின்னாடி ஏறிக்கோ நம்பி."

போகும்போது டாக்டர் பேச்சைத் தொடர்ந்தார்.

"என்னாச்சு அந்தம்மாவுக்கு?"

"தடால்னு மூர்ச்சை போட்டு விழுந்துட்டாங்க சார்" என்றான் நம்பி.

"ம்ம்ம்... என்ன பண்றது? ஏதோ வெளிநாட்டுல நாலு காசு பாக்கணும்னு அனுப்பிச்சு வச்சாங்க. அந்தப் பொண்ணு... அதான் அவ மகளுக்கு என்ன கோவம் வருது தெரியுமா? 'என் கையிலே அவன் கெடைச்சான்னா ஒரே வெட்டா வெட்டிடுவேன்'னு காளி மாதிரி கத்துதுப்பா எட்டு வயசுப் பொண்ணு... டெரிபிள்... அவ மைண்ட்ல இந்த வெறி பதிவாயிட்டிருக்கு... அது அவள ரொம்ப பாதிக்கும்."

**ப**த்தே நிமிஷத்தில் யமஹா நாணா வீட்டு வாசலில் நின்றது. வண்டியை நிறுத்திவிட்டு டாக்டர் மாடிப்படி ஏறும் போது நம்பிக்கு உடன் போகத் தோன்றவில்லை. அவன் பார்வை நாணாவின் தாயுடன் நின்றிருந்த சிறுமி நிர்மலாவிடம் சென்றது.

"மாமா" என்று அந்தப் பெண் பாட்டியின் கைப்பிடியை உதறிவிட்டு ஓடி வந்து அவனைக் கட்டிக்கொண்டு ஓவென்று அழத் தொடங்கியது. நம்பி அதை அணைத்துப் பிடித்து வயிற்றின் மேல் தலையைச் சாய்த்துக்கொண்டான்.

முதல் முறையாக ரஜினி, கமல் இருவருடைய திரைப்படங்களுக்கும் (சிவாஜி மற்றும் தசாவதாரம்) ஒரே சமயத்தில் வசனம் எழுதி வருகிறார் சுஜாதா.

தொகுப்பு : கங்கா
படங்கள் : ஸ்ரீஹரி



அவன் கை மெதுவாக இதமாக நீவி நீவி விட்டது.

டாக்டரின் சொற்கள் நினைவில் மீண்டும் மீண்டும் வர, அவனது கையின் ஆதுரம் அதிகரித்தது. சிறுமி விம்மி விம்மி அழுது அவனது வயிற்றுச் சட்டையை நனைத்தாள்.

சிறிது நேரத்தில் டாக்டர் பாலாஜி திரும்ப வந்தார்.

"ஒரு ஊசி போட்டிருக்கேன். கவலைப்பட ஒண்ணுமில்ல. அதிர்ச்சிதான். அவங்கள அலட்டவிடாமப் பாத்துக்கணும்" என்று நாணாவின் தாயாரைப் பார்த்துச் சொல்லிவிட்டு, நம்பியைப் பார்த்துக் கைகாட்டினார்.

"வண்டியிலே ஏறு!"

"சார்..." நம்பி தயங்கினான்.

"ஏறு... சொல்றேன்!" அவன் ஏறி உட்கார்ந்தான்.

வண்டி ஜனக்கூட்டம் தாண்டி எல்லை வந்ததும் சொன்னார்.

"அந்த காண்ட்ராக்ட் வந்தது உனக்கு. நீதான் மெடிக்கல் ஃபிட்னஸ் சர்ட்டிபிகேட்டுக்கு வந்தே. நாணா குடும்ப கஷ்டத்துக்காக நான் போறேன்னான்... நீ விட்டுக் குடுத்தே... ஆனா அவன் போய்ட்டான்... உனக்குப் பதில்! இப்ப இங்கியே இருந்துட்டிருந்தா அந்தப் பொண்ணு மனசு வேதனைப்படும். ஊருக்குப் போயிடு" என்றார். ○



# விருதும் கோர்ட்டும் இவருக்குத் தண்ணிபட்டபாடு!

ஆனந்த் பட்வர்தன்... இந்தியாவின் முன்னணி டாகுமென்டரி பட இயக்குனர். இவர் தனது படங்களுக்காக சென்சார் போர்டுடனும் அரசாங்கத்துடனும் மோதிய சந்தர்ப்பங்கள் ஏராளம். அண்மையில் சென்னைக்கு வந்திருந்தவரைச் சந்தித்துப் பேசினோம்.

**உங்களுக்கு டாகுமென்டரி படங்கள் எடுப்பதில் எப்படி ஆர்வம் ஏற்பட்டது?**

"எனக்குப் படிக்கிற காலத்தில் ஜெயபிரகாஷ் நாராயணின் மாணவர் இயக்கத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. பாட்னாவில் ஜெ.பி உரையாற்றிய பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தின்போது போலீஸ் மற்றும் ஆளும்கட்சியினரால் பிரச்னை, கலவரம் நிகழலாம் என்ற சூழ்நிலையில், பொதுக்கூட்டத்தை ஃபிலிமில் பதிவு செய்யும் பணி எனக்குத் தரப்பட்டது. எதிர்பார்த்தபடியே கலவரம் நடந்தது. ஏராளமான அப்பாவிகள் காயமடைந்தனர். போலீஸ் ஜெ.பியை அடித்தார்கள். அதை நான் எட்டு மி.மீ திரைப்பட கேமராவில் பதிவு செய்தேன். தொடர்ந்து நெருக்கடி நிலை பிரகடனம் ஆனது. பெரும் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். நான் தலைமறைவாகி விட்டேன். நான் பதிவு செய்த படம், எமர்ஜென்ஸி அத்துமீறல்களுக்கு உதாரணமாக, பல இடங்களிலும் ரகசியமாகத் திரையிடப்பட்டது.

இந்தியாவில் இருந்துகொண்டு எமர்ஜென்ஸியை எதிர்ப்பது இயலாத காரியம் என்ற சூழ்நிலையில் நான் ஸ்காலர்ஷிப் பெற்று, அமெரிக்காவுக்கு மேற்படிப்புக்காகச் சென்றுவிட்டேன். அங்கே எனது அமெரிக்கப் பல்கலைக்கழக மாணவர்கள் மத்தியில் இந்தியாவின் எமர்ஜென்ஸி குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தினேன்.

தொடர்ந்து சமுதாய பிரச்னைகளை மையப்படுத்தி ஆவணப்படங்கள் எடுக்க ஆரம்பித்தேன். நெருக்கடி நிலையின்போது நடந்த மனித உரிமை மீறல்கள் குறித்து 1978-ல் எடுக்கப்பட்ட படத்துக்கு பிரிட்டிஷ் விருது கிடைத்தது.

மும்பை மாநகராட்சி, மும்பையை அழகுபடுத்தும் பெயரில் குடிசைப் பகுதிகளை புல்டோசர் கொண்டு தகர்த்து, அப்பாவி மக்களை விரட்டியடித்தது. இது குறித்து 1985-ல் எடுக்கப்பட்ட படத்துக்குத் தேசிய விருது கிடைத்தது. பாரிஸ் பட விழாவில் ஜூரி விருதும் கிடைத்தது. இந்தியாவில் எடுக்கப்பட்ட ஆவணப் படங்களிலேயே தலைசிறந்தது 'மும்பை; எங்கள் நகரம்' என்று டைம்ஸ் ஆஃப் இந்தியா பாராட்டியது. 'நெகிழ வைக்கும் ஆவணப்படம்' என்று விமர்சனம் எழுதியது அமெரிக்காவின் லாஸ் ஏஞ்சல்ஸ் டைம்ஸ்.

1998-ல் எடுத்த 'பேராசைக் கடலில் மீன் பிடிப்பு' என்ற ஆவணப்படம், மோட்டார்





படகு வைத்திருக்கும் பணக்கார மீனவர்களும், பன்னாட்டு மீன்பிடிக் கப்பல்களும், கட்டுமர மீனவர்களின் வயிற்றில் அடிக்கும் அக்கிரமத்தைப் படம் பிடித்துக் காட்டியது. ஆம்ஸ்டர்டாம் மற்றும் யோகஹாமா டாகுமெண்டரி பட விழாக்களில் இதற்கு விருது கிடைத்தது.

மும்பை மில் தொழிலாளர்கள் பிரச்னை, நர்மதா அணையின் பாதிப்புகள் ஆகியவை குறித்து எடுக்கப்பட்ட ஆவணப்படங்கள் சர்ச்சையையும் ஏற்படுத்தின; விருதுகளையும் பெற்றுக் குவித்தன.

'ராமரின் பெயரில்'- இது அயோத்தி பிரச்னை குறித்து நான் எடுத்த ஆவணப்படம். முதல் தடவை அத்வானி ரதயாத்திரை சென்றபோது ஆரம்பித்தேன். நம் நாட்டில் மத நல்லிணக்கம் குறைந்து வருவதை நுட்பமாய் எடுத்துச் சொன்ன அந்தப் படத்தில், அயோத்தி ராமர் கோயில் பூசாரியான லால்தாஸின் விரிவான பேட்டி இடம் பெற்றது."

2002-ல் 'போரும் அமைதியும்' எடுத்தேன். காந்திஜி படுகொலையில் இப்படம் ஆரம்பிக்கிறது. அஹிம்சையை உலகுக்கு போதித்த நாடு, எப்படி அணு ஆயுதப்போட்டியில் தீவிரமாய் இறங்கியிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டும் படம். இதுவரை இதற்கு ஒன்பது விருதுகள் கிடைத்துள்ளன. இதில் நம் அரசாங்கத்தின் தேசிய விருதும் அடக்கம்.

**சென்சார், மத்திய அரசு இவற்றுடன் நிறைய தடவை மோதி இருக்கிறீர்களே! ஏன்?**

"ஆவணப் படங்களில் நான் சொல்லும் கருத்துக்களை, காட்சிகளை பல சமயங்களில் சென்சார் போர்டு ஆட்சேபிக்கும். கோர்ட்டுக்குப் போவதைத் தவிர எனக்கு வேறு வழி கிடையாதே! சமீபத்திய 'போரும் அமைதியும்' படத்தில் 21 இடங்களில் வெட்ட வேண்டும் என்றது சென்சார் போர்டு. நான் கோர்ட்டுக்குப் போனேன். ஒரு வெட்டுகூட இல்லாமல் திரையிடலாம் என்று தீர்ப்பளித்தது சுப்ரீம் கோர்ட்.

அதேபோல, என் படங்கள் எல்லாமே தேசிய விருது பெற்றவை. ஆனால், தூர்தர்ஷனில் அவற்றை ஒளிபரப்ப மாட்டோம் என்பார்கள். நான் கோர்ட்டுக்குப் போவேன். 'தேர்வுக்குழுவில் இடம் பெறுபவர்களின் முடிவில் விருது அளிக்கப்பட்டது. ஆனால், படத்தை தூர்தர்ஷனில் திரையிட்டால் சட்டம் ஒழுங்குப் பிரச்னை எழும்' என்று அரசாங்க தரப்பில் வாதிடுவார்கள். கோர்ட் அதை ஏற்றுக்கொள்ள மறுத்து, தூர்தர்ஷனில் ஒளிபரப்ப வேண்டும் என்று தீர்ப்பளிப்பார்கள். ஒருவழியாய் இரவு பதினொரு மணிக்கு, நேரம் ஒதுக்குவார்கள். இது எனக்கு சகஜமாகி விட்ட விஷயம்."

சந்திப்பு, படங்கள்:
**எஸ். சந்திரமௌலி**

# ஏன் உயர்ந்தாய் தங்கமே?

சினிமா, கிரிக்கெட்டுக்கு அடுத்தபடியாக எவர்க்ரீன் சப்ஜெக்டாக உள்ள இன்னொரு விஷயம்... தங்க விலை! 'The lure of the yellow metal' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். வேறு எந்த உலோகத்துக்கும் இல்லாத மவுசும் பவுஸும் தங்கத்துக்கு உண்டு. மக்கள் ஆசையாக வாங்க வாங்க... தங்கத்தின் விலையும் ஏறிக்கொண்டே தான் வருகிறது. ஒரு கிராம் ஆபரணத் தங்கத்தின் விலை மூன்று மாதங்களுக்கு முன்பு ரூபாய் 590 ஆக இருந்தது. தற்போது 690 ஆக உயர்ந்துள்ளது... ஏன் இந்த அசாதாரண விலையேற்றம்?

சர்வதேசச் சந்தையில் தங்கத்தின் விலை உயர்ந்தாலும், இங்கே விலை உயர்கிறது, அமெரிக்க டாலர் - இந்திய ரூபாய்க்கு உள்ள நாணய மாற்று மதிப்பு ஏறினாலும் தங்க விலை உயர்கிறது. சர்வதேச சந்தையில் இந்த வருஷ ஆரம்பத்தில் ஒரு அவுன்ஸ் தங்கத்தின் விலை 426 டாலர். தற்போது 500 டாலர்.

சர்வதேசச் சந்தையில் தங்கத்தின் விலை ஏறுவதற்கு என்ன காரணம்? உலக தங்க உற்பத்தி என்னவோ ஒரே அளவில்தான் இருக்கிறது. ஆனால், தங்கத்தில் முதலீடு செய்பவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே இருக்கிறது... அதனால்தான் இந்தக் 'கிடுகிடு' ஏற்றம்!

தங்க விலை இறங்குவதற்கு ஏதாவது சாத்தியக்கூறு உண்டா என்றால், ஸாரி... 'இல்லை' என்றுதான் உதடு பிதுக்க வேண்டியுள்ளது.



சமீபத்தில் வெளியான ஒரு செய்தியின்படி, இந்தியாவில் ஒவ்வொரு வருஷமும் சுமார் 40,000 கோடி ரூபாய்க்கும் அதிகமாகத் தங்க நகைகள் விற்பனையாகின்றன. அதற்குக் காரணம்... தங்கம் ஒரு சிறந்த முதலீடாக இருப்பதுதான்! பழைய தங்க நகைகளைப் போட்டுவிட்டு, அதற்குச் சமமாகவோ, அதிகமாகவோ புதிய டிஸைன்களில் ஆபரணங்கள் அணியும் கிரேஸும் அண்மையில் பெண்களிடம் அதிகரித்துள்ளது. ஒருவேளை நமது இந்திய நாணயம், அமெரிக்க டாலருக்கு எதிரான நாணய மாற்று விகிதத்தில் ஏறுமுகம் காண்பித்தால், தங்கத்தின் விலை இந்தியாவில் சற்றுக் குறையலாம். ஆனால் இதற்கும் உடனடி சாத்தியக்கூறு இல்லை.

எனவே... டீவி செய்திகளில் 'தங்கம் மற்றும் வெள்ளியின் இன்றைய நிலவரம்' என்று வாசித்தால், 'குறைந்துவிட்டதா, என்ன?' என்று அல்ப ஆசையோடு காதுகளைத் தீட்டுவது இப்போதைக்கு ஏமாற்றமே அளிக்கும்!

**- வி. கோபாலன்**

# பாலுவின் ஆவி!



ஏ.ஜி.எஸ்.

மந்திரவாதி, சிவாவைப் பார்த்து... "சொல்லு" என்றார்.

"ஐயா... என்னோட நண்பன் பாலு ரெண்டு மாசத்துக்கு முன்னால தற்கொலை செஞ்சுக்கிட்டான். ஆனா கொஞ்ச நாளா... அவனோட ஆவி என்னையே சுத்தி சுத்தி வருதுங்க."

"அதை எப்படித் தெரிஞ்சுக்கற...?"

"அவனோட குரல் எனக்கு மட்டும் தெளிவா கேக்குது... சில சமயம் அவனோட உருவமும் கண்ணுக்குத் தெரியுது. இதுல இன்னொரு ஆச்சரியமான பயங்கரம் என்னன்னா... போன வாரம் பஸ்ல போய்க்கிட்டிருக்கும்போது... பக்கத்து சீட்ல பாலு உட்கார்ந்திருந்தான். அதிர்ச்சில நான் உறைஞ்சு போய்ட்டேன். ஆனா மொதல்ல உட்காரும்போது... வேற ஆள்தான் அங்க இருந்தான். அப்புறம் தியேட்டர்ல கூட திடீர்னு பக்கத்துல பாலு... பயந்து போய் பாதியிலேயே தியேட்டர விட்டு வந்துட்டேன். ராத்திரில தூக்கமே இல்ல..."

மந்திரவாதி யோசித்தார்...

"ஏன் அவனோட ஆவி உன்னையே சுத்திவரணும்?"

சிவா அமைதியாயிருக்க... மந்திரவாதி மீண்டும் கேட்டார்.

"வந்து... அவனுக்கு நான் ஒரு லட்ச ரூபா தரணும். அதைத் தராம ஏமாத்தலாம்னு நினைச்சேன்." சிவா உண்மையைச் சொன்னான்.

"சரி... எனக்குப் பத்தாயிரம் கொடு... இந்தத் தொல்லையே இல்லாம பண்ணிடலாம்... என்ன?"

சிவா தலையாட்ட, மந்திரவாதி "கொஞ்சம் இரு" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றார். சில நிமிடங்களில் உள்ளிருந்து பாலு வெளியே வர...

அடுத்த சில நாட்களுக்குள் சிவா தான் தரவேண்டிய ஒரு லட்ச ரூபாயை பாலுவின் வீட்டுக்கே சென்று கொடுத்தான். ○



# உலக அழகியா.

நடாலியா க்லிபோவா... அட... பேரே சும்மா கலகலன்னு இருக்குல்ல! இவங்க தான் இந்த வருஷத்தோட பிரபஞ்ச அழகி. 'போனவாரம் டோட்டல் தமிழ் நாடே ரொம்ப ஜில்லுன்னு இருந்ததுக்கு மழை மட்டும் காரணமில்லீங்க, நான் உங்க ஊருக்கு வந்ததும்தான்'னு சொல்றாங்க இவங்க. சரி, இவங்க சென்னைக்கு விசிட் அடிச்சது நமக்குத் தெரியும். வேற யாருக்காவது தெரியுமா... அட்லீஸ்ட் இவங்க யாருன்னாவது தெரியுமான்னு கேட்கலாம்னு நடாலியா போட்டோவோட நம்மூர் மாண்புமிகு மகளிரைச் சந்திக்கப் போனோம். நம்மைப் பார்த்தவுடனேயே, "என்ன... குஷ்பு - சுஹாசினி மேட்டருக்கு கருத்துச் சொல்லணுமா"ன்னு கேட்டு வெறுப்பேற்றாதவர்கள் ரொம்பக் கம்மிதான்.

முதலில் நாம் போட்டோவைக் காட்டியது கோயில் வாசலில் பூ விற்கும் ஜீவரத்தினம் அம்மாவிடம். "என்னப்பா இது... பொட்டபுள்ள போட்டோவை வச்சுக்கிட்டு சுத்தறீங்க... பௌடர் லாம் பூசிக்கிட்டு பார்க்கறதுக்கு சும்மா பளீர்னு நம்மூர் புள்ள மாதிரி இருக்கே. என்னதான் சொல்லு மஞ்சள் பூசுனா வர்ற அழகே தனிதான்'' என்றவரிடம் அவர் பிரபஞ்ச அழகி என்றதும், "அட... ஐஸ்வர்யா மாதிரி இது ஒண்ணா...'' என்றவர், முழும் போடுவதில் பிஸியாக, நாம் அடுத்தவருக்கு வலை வீசினோம்.



• நீமா

சிக்கியது, கல்யாண மண்டப வாசலில் நின்றிருந்த குடும்பத் தலைவி மகேஸ்வரி. போட்டோவைக் காட்டியதுதான் தாமதம்... "அட... நம்ம சானியா மிர்ஸா... எங்க மூக்குத்தியக் காணும்" என்று போட்டாரே ஒரு போடு... ஒரு வழியாக மனத்தைத் தேற்றிக்கொண்டு விஷயத்தைச் சொல்லி, "இவர் உண்மையிலேயே அழகியா...'' என்றோம்.

"அட... என்னங்க நீங்க... உலகத்துல இருக்குற எல்லாப் பொண்ணுமே அழகுதாங்க... என்ன இவங்க கொஞ்சம் அல்ட்ரா மாடர்ன் அழகு. பாருங்க... முகம்

எவ்ளோ க்யூட்டா இருக் குன்னு'' என்று சொல்லி விட்டு, மண்டபத்துக்குள் நகர, நாம் அடுத்த இடத்துக்கு விஷ்க்...!



• சரசு



• ஜீவரத்தினம்



•மகேஸ்வரி

கண்ணும் கருத்துமாகத் தனது செருப்புத் தைக்கும் தொழிலில் பிஸியாக இருந்தார் சரசு. அவரிடம் போட்டோவை நீட்டினோம்... "யாரு இந்தப் பொண்ணா, ரெண்டு மூணு நாளுக்கு முன்னால தினத்தந்தியில பார்த் தேன். ஏதோ ஒலக அழகியாம்ல... மெட் ராசுக்கு வந்திருக்கு போல" என்றாரே பார்க்கலாம்... நமக்கு ஆச்சரியத்தில் பேச்சே வரவில்லை.

அமைதியாகக் கிளம்பினோம். தெளிவாகக் குழப்பிவிட்டு நகர்ந்தார் சுபா.

கடைசியாக ஒரு கல்லூரி மாணவி யிடம் கேட்டுவிட்டால் மேட்டர் சக்ஸஸ் என்று சாமியை வேண்டிக் கொண்டே சென்றால், பஸ் ஸ்டாப்பில் செம கூட்டம். அதிலிருந்த நீமாவை ஓரங்கட்டி, போட்டோ காட்டி, "இவங்க யாருன்னு எங்களுக்கே தெரியும். ஆனா இவங்க எதுக்காக சென்னை வந்தாங்க தெரியுமா?" என்றோம்.

# உள்ளூர் அழகியா..?

எதிரே ஒரு தனியார் நிறுவன ஊழியை தனது டூவீலரை நிறுத்திக்கொண்டிருந் தார். பெயர் சுபாவாம். படத்தைக் காட்ட,

''இவங்களைத் தெரியாதா... சுஷ்மிதா மாதிரி இப்போ இவங்கதான் மிஸ் யுனிவர்ஸ் நடாலியா" என்று கரெக்டாகச் சொல்லி நம்மை வெறுப் பேற்றினார். நாமும் விடாமல், "இப்போ அழகிப் போட்டி கள் நிறைய நடக்குதே... இதை நல்லதுன்னு நினைக்கறீங்களா... இல்ல... தேவையில் லைன்னு சொல்றீங் களா?" என்று இழுத் தோம்.

"முழுக்க முழுக்க கெட்டதுன்னும் சொல்ல முடியாது... அதுக்காக ரொம்ப அவசியமான விஷ யம்னும் சொல்ல முடியாது'' என்று

"சென்னை வந்தாங்களான்னு தெரி யாது... ஆனா நிச்சயமாக மார்க்கெட்ல ஒரு புது காரை அறிமுகப்படுத்த வந்தி ருப்பாங்க. இல்ல மியூஸிக் ஆல்பம் ரிலீஸ் பண்ணியிருப்பாங்க. இல்லன்னா எய்ட்ஸ், கேன்சர் தொடர்பா ஏதாவது கருத்தரங் குல கலந்துக்க வந்திருப்பாங்க" என்று ஃப்ளாக்கில் சில உண்மைகளை எடுத்து விட்டபடி கிளம்பினார்.

• கலை

அட்டை மற்றும் படங்கள் : ஸ்ரீஹரி



• சுபா

டர்ந்து இரண்டு வாரங்களுக்கு மேல் மார்பு படபடவென வேகமாகத் துடித்துக்கொண்டிருந்தால், மாரடைப்பு ஏற்படலாம். இதனைத் தடுக்க இதயத்தில் எந்தப் பகுதி பாதிப்படைந்திருக்கிறது என்பதை 3டி முறையில் அடையாளம் காட்டும் கருவியின் பெயர் 'கார்டோ'. மருத்துவர்கள், நோயாளிகளுக்கு 'கார்டோ' வரப்பிரசாதமாக விளங்கி வருகிறது.

-Rx



## மெடிக்கல் மூலை

## அதிசய

'அம்மா, அப்பா, தாத்தா...' என்று மழலை மாறாமல் சொல்லும் வயதில் குழந்தை வசி, ரகளையாக பெரிய பெரிய வார்த்தைகளைப் படிப்பது அதிசயமே. அதுவும் தலைகீழாகக் காண்பித்தாலும் கரெக்டாகப் படிப்பது புதுமை. இவனுக்கு இன்னும் ஏபிஸிடி, அஆ... எழுதப் படிக்கத் தெரியாது என்பது கூடுதல் சிறப்பு.

"எங்க பிள்ளை வசி, சுமார் 90 நாடுகளின் தேசியக் கொடிகளை பளிச்சென்று அடையாளம் காட்டுவான். எந்த விளம்பரமாக இருந்தாலும் டக்கென்று பெயரைச் சொல்லிவிடுவான். ஸாரே ஜஹான் ஸே அச்சா, ஜனகணமன முதலானவற்றை துளிக்கூட பிழையின்றிப் பாடுவான். எந்த வார்த்தைகளையும் ஒருமுறை எழுதிக் காட்டினால் போதும், ஞாபகம் வைத்துக் கொள்வான். இப்போ பெரிய பெரிய பாராகிராஃப் படிக்க ஆரம்பிச்சுட்டான்...'' - இப்படிப் பெருமை பொங்கச் சொல்வது பெங்களூரில் வசிக்கும் கோமதி, பாலாஜி தம்பதி.

எல்லாக் குழந்தைகளுமே பாடி, படிச்சு, அதகளம் பண்ணுறதே... இது என்ன அதிசயம் என்பவர்களுக்கு... வசி இரண்டரை வயதுக் குழந்தை!

"வசி ஒன்பது மாதக் குழந்தையாக இருந்தபோதே கொஞ்சம் அசாதாரணமா இருக்கறதா உணர்ந்தோம். முதல்ல பயமா இருந்துச்சு. 'என்னடா இது, எல்லா குழந்தையும் போல நார்மலா இல்லையே'ன்னு. அப்புறம் இவன்கிட்ட ஏதோ தனியான திறமை இருக்குன்னு உணர்ந்ததும்தான் நிம்மதி வந்துச்சு. அப்போ சென்னை வந்திருந்தோம். பெரிய பெரிய விளம்பர ஹோர்டிங்குகளைப் பார்த்துக் கத்திக் கத்தி படிக்க ஆரம்பிச்சான். அதுவும் 'சென்னை சில்க்ஸ்' அவனுடைய ஃபேவரிட்... ஜெயச்சந்திரன், போத்தீஸ்ன்னு எல்லா கடை விளம்பரமுமே அவனுக்கு ரொம்பப் பிடிக்கும்." என்கிறார் கோமதி.

இவர் நாள் பூராவும் குழந்தைக்கு எழுதி எழுதிக் காண்பிக்கிறார். நோட்டு முழுவதும் சளைக்காமல் அவர் எழுதியிருப்பதைப் பார்த்து பிரமிப்பதா, அதை உடனே கப்பென்று பிடித்துத் தன் குட்டி மூளையில் பதிவு செய்யும் வசியைப் பாராட்டுவதா?

"என் மாமியார், நான் பிரசவித்தவுடன் எனக்குக் கொடுத்த அறிவுரை, 'பால் புகட்டும்போது, என் பையன் பெரிய தலைவரா வரணும், அப்துல்கலாம் மாதிரி வரணும்னு நெனச்சுட்டுக் குடு' என்றார். வசீகரன் என்ற பெயரின் சுருக்கம்தான் வசி. மாமியார்

வைத்ததுதான்... எங்க வசிக்கு என்ன மாதிரி பாடம் சொல்லிக் கொடுக்கணும், இன்னும் சிறப்பாக வர்ற மாதிரி ஸ்பெஷல் கோர்ஸ், பயிற்சி இருக்கா... இப்படிப் பல கேள்விகளுக்கு எங்ககிட்ட விடை இல்ல. முறையா யாரேனும் கைடு பண்ணினால் நல்லா இருக்கும். இவன் இப்பவே கம்ப்யூட்டரில் படு ஆர்வமாக இருக்கிறான். அவன் பெரிய ஆளா வரணும்ங்க..." கோமதியின் கண்களில் கனவு விரிகிறது.

வேலூரைச் சேர்ந்த பாலாஜி, பெங்களூரில் ஜி.ஈ கன்ஸ்யூமர் அண்ட் இன்டஸ்ட்ரியல் நிறுவனத்தில் பொறுப்பான பதவியிலிருக்கிறார்.

தற்சமயம் ப்ளே ஸ்கூல் போய்க் கொண்டிருக்கும் வசி, அங்கும் படு பாப்புலராம். வசியைக் கூடுதல் கவனத்துடன் வளர்க்க வேண்டும், அவனுக்கு அதிக டயம் ஒதுக்க வேண்டும் என்ற காரணத்தினாலேயே இன்னொரு குழந்தை இப்போதைக்கு வேண்டாம் என்ற எண்ணத்திலிருக்கின்றனர் இந்தத் தம்பதி.

- பெங்களூரிலிருந்து...

**லதா சேகர்**

# குழந்தை வசி!



* அம்மா-
அப்பாவுடன் வசி..

# போட்டுத் தாக்கு!

ராப்ரிதேவியிடம் கேட்கக்கூடாத பத்துக் கேள்விகள்:-

பரமு

1 வீட்டுக்குள்ளேயே ஒரு நர்சரி ஸ்கூல் நடத்தறதா சொல்றாங்களே... உண்மையா?

2 'கணவருக்காக' சீரியலை பீகாரி மொழில டப் பண்ணணும்னு அடம் பிடிக்குறீங்களாமே...?

3 'நாங்க தோத்ததுக்குச் சதிதான் காரணம்'ங்கறீங்களே... யாரு லாலுவைச் சொல்றீங்களா?

4 நிதிஷ்குமார் வொய்ஃப் கிட்ட போய், 'ஏன் இப்படி விட்டுக் கொடுத்தீங்க?'ன்னு கேட்டது நிஜம்தானே?

5 இதுவரைக்கும் எத்தனை இடத்துல கண்ணை மூடிக்கிட்டு கைநாட்டு வச்சிருப்பீங்க?



6 'பீன்ஸ் நறுக்கிக்கொண்டே பட்ஜெட் போடுவது எப்படி?'ன்னு புத்தகம் எழுதப் போறீங்களாமே?

7 கிச்சன் கேபினட்னு சொல்வாங்களே... அது நீங்க அமைச்சதுதானே?

8 புண்ணாக்கை தேசிய உணவா அறிவிக்கணும்னு போராடற ஐடியா இருக்கா?

9 லாலுகூட எங்க போனாலும் 'கால்நடை'யாத்தான் போவீங்க போல...

10 உண்மையான பசுநேசன் ராமராஜனா, லாலுவா?

